

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி - மார்கழி - 2025 - ஜனவரி | இணைய வழி - மலர் - 2 - இதழ் - 5

## அருள்மிகு சிவகாமி அம்மன் உடனுறை ஆனந்த நடராசமூர்த்தி

### தென் சபாநாயகர் திருக்கோயில், கோவிலூர்

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – மார்கழி

2025–ஜனவரி

இணையவழி மலர் 2 – இதழ் 5

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

தீபா ராஜேஸ்வரி

கோவிலூர்


## பொருளடக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

அனைவருக்கும் தமிழர் திருநாள் நல்வாழ்த்துகள். இம்முறை தமிழர் திருநாளைக் காசியில் மகரசங்கராந்தியாக நாம் கொண்டாடினோம். காசி விசுவநாதர் திருக்கோயிலில் சிறப்பு வழிபாடு செய்தோம். காசியில் தரிசித்த பலன் நம் அனைவருக்கும் பரிபூரணமாகக் கிடைக்கட்டும்.

நகரத்தார்களின் ஒற்றுமை சிறக்க வேண்டும். நகரத்தார் குலம் அனைத்துத் துறைகளிலும் வல்லமை பெற்று உயர்ந்த குலமாக விளங்க வேண்டும். இதற்கான பல முன்னெடுப்புகளை நாம் இப்போது எடுத்தாக வேண்டும்.

சென்னைவாழ்



காசி விஸ்வநாதர் கோவிலில் ருத்ரபிஷேகம்



அன்பர்கள் இது குறித்து உரையாடுகிறார்கள்.

நகரத்தார் இனத்தின் முன்னேற்றம் கருதி பல அமைப்புகள் தொடங்கப்படுகின்றன. நகரத்தார் ஊர்களிலும், நகரத்தார் சென்று வாழும் ஊர்களிலும், உலக நாடுகளிலும் பல சங்கங்கள் உள்ளன. இவை அனைத்தும் யாருக்காக ஏற்படுத்தப்படுகின்றன என்று சிந்திக்க வேண்டும். எதற்காக இத்தனை சங்கங்கள் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். நகரத்தார் முன்னேற்றம் தானே அத்தனை சங்கங்களின் நோக்கம். நகரத்தார்களின்

வயிரவன்கோயில் நகரத்தார் சங்கத்தின் முதல் ஆண்டு விழாவிற்கு நாம் சென்றிருந்தோம். அப்போது நகரத்தார் இனம் முன்னேறுவதற்கான பல யோசனைகளை நாம் பகிர்ந்து கொண்டோம். இந்த யோசனைகள் பலரையும் சென்று சேர்ந்திருக்கிறது. காணொளி மூலமாக பலரும் இதனைப் பரவலாக்கம் செய்துள்ளார்கள். நம்மை நேரடியாகச் சந்திக்கும் நகரத்தார்

ஒற்றுமை, முன்னேற்றம் ஆகியவற்றை உருவாக்குவதற்குத்தானே இத்தனை சங்கங்கள். இதற்கு ஒரு சங்கமே போதுமே! இதனால் சங்கங்களே வேண்டாம் என்பது நம் கருத்து அல்ல.

பல சங்கங்கள் இருக்கலாம். சங்கங்கள் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் சங்கங்களில் தேர்தல் வைத்து

தலைவர், செயலர் போன்ற பொறுப்புகளைத் தேர்ந்தெடுக்க வேண்டாம் என்பது நமது யோசனை. தேர்தலின் மூலம் பிரிவினை வருகிறது. ஏச்சுகள், பேச்சுகள் எழுகின்றன. தேர்தல் இல்லாமல் தலைவர் செயலர் போன்ற பதவிகளுக்கு உரியவர்களைத் தேர்ந்தெடுக்க நமது நகரத்தார்கள் முன் வரவேண்டும். இப்படி வந்துவிட்டால் பேதம் இல்லை. பிரிவினை இல்லை. ஏச்சு பேச்சுகள் இல்லை.

காசி நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம் மிக நேர்த்தியான நகரத்தார் கூட்டமைப்பு ஆகும். இருநூறு ஆண்டுகளுக்கும் மேலாக காசி விசுவநாதருக்கு மூன்று காலங்களிலும் நாள் தவறாமல் காலம் தவறாமல் சம்போ நிகழ்வை நடத்தி வரும் அறம், தர்மம் சார்ந்த அமைப்பு. இரண்டாம் உலகப் போர் காலத்திலும், எமர்ஜென்சி காலத்திலும், உலகமே அச்சமுற்று அடங்கிய கொரோனோ காலத்திலும் காசி விசுவநாருக்கான நகரத்தார் சம்போ தடையின்றி நடைபெற்றது என்பது பெருஞ்சிறப்பு. சொத்துகளால் காசி நகரத்தார் சத்திரத்திற்குப் பெருமை இல்லை. அது செய்து வரும் தருமத்தால் சேவையால் நகரத்தார்களுக்குப் பெருமை. நகரத்தார் சம்போவிற்கு காசி நகரமே எழுந்து நின்று மதிப்பளிக்கும். இப்பெருமையை நகரத்தார் இளைஞர்கள் உணரச் செய்ய வேண்டும். அவர்களை இதில் கலந்து கொண்டு காசி சம்போ பெருமையை உணர வைக்கவேண்டும்.

காசி நாட்டுக் கோட்டை நகரத்தார் சத்திரத்திற்கான நிர்வாகிகளையும் தேர்தல் இன்றி தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்தல் இல்லையென்றால் போட்டி, பொறாமை, தூற்றல், பிரிவினை இருக்காது. ஒவ்வொரு முறை தேர்தலிலும் ஒரு குழு வெற்றி பெற மற்ற குழுவினர் அவர்களை விமர்சிக்க நமக்குள் பிரிவுகள் வளர்கின்றன. ஒன்றரை இலட்சம் மக்கள் தொகை உள்ள மரபு, பண்பாடு போற்றும் நகரத்தார் இனத்தில் ஒற்றுமை வளரவேண்டுமே தவிர வேற்றுமை, பிரிவினை தாழ்வு வந்துவிடக் கூடாது. இது குறித்து காசி நகரத்தார் சத்திரம் பொதுக் குழுக் கூட்டி முடிவெடுக்கலாம். காசி சத்திர நிர்வாகத்திற்கு வந்துச் சிறப்புடன் சேவை செய்ய விரும்பும் நகரத்தார்கள் அனைவரும் காசி விசுவநாதர் முன்னிலையில் விண்ணப்பித்துத் திருவுளச் சீட்டு வழியாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றால் தேர்தல் இருக்காது. இன்னும் நம் நகரத்தார் ஒற்றுமை வளரும். இத்தகைய முயற்சிக்குக் காசி விசுவநாதர் வழி காட்டுவார் என்ற நம்பிக்கை நமக்கு இருக்கிறது. திருவுளச் சீட்டின்

வழியாக நல்ல சேவையாளரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய பொறுப்பு காசி விசுவநாதருக்கு வந்து விடும். அவரே சிறப்பானவரைத் தேர்ந்தெடுத்துத் தருவார்.

நகரத்தார் ஒற்றுமை வளர இன்னும் நாம் பல வழிகளில் சிந்திக்க வேண்டியுள்ளது. நகரத்தார்களுக்குள், குறிப்பாக சொந்தங்களுக்குள் ஏற்படும் சொத்துப் பிரச்சனைகளுக்கு நீதி மன்றத்தை நாடும் அளவிற்குச் செல்லுதல் கூடாது. நமக்குள்ளேயே சமாதானமாகப் பேசி சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். நீதி மன்றத்திற்குச் சென்றால் நீதி கிடைக்கப் பல தலைமுறைகள் ஆகும் என்பதை உணர்ந்து யாரும் இனி நீதி மன்றத்தை நாட வேண்டாம் என்ற முடிவிற்கு வரவேண்டும்.

நகரத்தார்களுக்குள் நிலவும் சிக்கல்களைத் தீர்க்க பஞ்சாயத்து முறை சிறப்பு. அதனைத் தாண்டி நகரத்தார் வழக்கறிஞர்கள் ஒன்று கூடி ஓர் அமைப்பினை ஏற்படுத்த வேண்டும். நோக்கமின்றி பல சங்கங்கள் வைப்பதை விட இதுபோன்று நன்நோக்கம் கருதிச் சங்கங்கள் அமைக்கலாம்.நகரத்தார் வழக்கறிஞர் சங்கம் என்பதை ஏற்படுத்தி அவ்வமைப்பின் வழியாக நீதி மன்றத்திற்குச் செல்வதற்குப் பதிலாக எழும் சிக்கல்களைச் சட்ட அறிவின்படி ஆய்ந்து தீர்வு காணலாம். நீதி மன்ற செலவுகள், வழக்கறிஞர் செலவுகள், மன உளைச்சல் போன்றன நிச்சயமாகக் குறையும்.

மேலும் நகரத்தார் இளைஞர்களைக் குறிப்பாக நகரத்தார் இளம் பெண்களை நாம் நமது பண்பாட்டு அடையாளங்களை, வாழ்க்கை நெறிமுறைகளைச் சொல்லி, காட்டி வளர்க்க வேண்டும். பல குடும்பங்களில் ஏற்படும் மணமுறிவிற்கும் நாம் தீர்வு கண்டால் இன்னும் நகரத்தார் இனம் உயரும். நகரத்தார் பெண் பிள்ளைகளுக்குக் குடும்பத்தில் நடந்து கொள்ள வேண்டிய பாங்கு, பொறுத்துப் போகும் குணம் , பிறந்த வீட்டிற்கும் புகுந்த வீட்டிற்கும் பெருமை சேர்த்து இரு வீட்டையும் பேணி வாழ்க்கை நடத்துவதற்கான பழக்க வழக்கங்களைக் கற்றுத் தர வேண்டும். இதற்கான பணிகளைச் செய்யவும் நாம் சிந்தித்து வருகிறோம்.

திருப்பதியில் எதிர்வரும் பிப்ரவரி மாதம் 17 ஆம் தேதி முதல் 19 ஆம் தேதி வரை சர்வதேச கோயில்கள் மாநாடு மற்றும் கண்காட்சி (The International Temples Convention and Expo (ITCX)) நடைபெற உள்ளது. இம்மாநாட்டில் நம் நகரத்தார் ஊர்கள் சார்ந்த எழுபதுக்கும்

மேற்பட்ட நகரக் கோயில்களின் நிர்வாகிகள் கலந்து கொள்ள இருக்கிறார்கள். இது உலக அளவில் நமது நகரத்தார் கோயில்கள் பற்றிய அறிதலை ஏற்படுத்தும். மேலும் நகரத்தார்களாகிய நாம் கோயில் பணிகளை இன்னமும் செம்மையாகச் செய்ய வழி காட்டும். அத்தோடு இம்மாநாட்டிற்காகக் கூடும் நாம் நமக்குள் ஒற்றுமை வளர, கோயில் பணி மேம்பட பல நல்ல முன் முயற்சிகளை உருவாக்க முடியும் என்று எண்ணுகிறோம். திருப்பதி என்ற திவ்ய தேசத்தில் நமது நகரத்தார் நகரக் கோயில்களின் கூட்டமைப்பில் கலந்து பேசவுள்ள இந்தத் தருணம் மிக மிக இன்றியமையாத தருணமாக நாம் கருதுகிறோம்.

நகரத்தார்களின் முன்னேறத்தை நாளும் காண நாம் அனைவரும் ஒன்று பட்டுச் செயல்படுவோம். ஒன்று பட்டால் உண்டு வாழ்வு என்பதே நமக்கான முன்னேற்ற வாசகம்.

# நல்வழி பாடல்கள்

**பாடல்24**

நீறில்லா நெற்றிபாழ்(;) நெய்யில்லா உண்டிபாழ்

ஆறில்லா ஊருக் (கு) அழகுபாழ் மாறில்

உடன்பிறப் பில்லா உடம்புபாழ் (;) பாழே

மடக்கொடி இல்லா மனை

**விளக்கம்**

திருநீரோ, திருமண்ணோ இடாத நெற்றி வீணானதாகும், நெய் யில்லாமல் உண்ணும் உணவு வீணானதாகும், நீர் வளம் தரும் ஆறு இல்லாத ஊர் வீணானதாகும், ஒத்த கருத்து உடைய உடன்பிறப்பு இல்லாத உடம்பு வீணானதாகும், அதே போல நல்ல குணங்கள் உள்ள மனைவி இல்லாத வீடு வீணானதாகும்

## கோவிலூரின் கதை - 13

# சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகளின் கதை



- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

தேவகோட்டைக்கு அருகில் உள்ள அனுமந்தக்குடி ஒரு பெரும் வேதாந்த ஞானியை உலகுக்கு அளித்துள்ளது. அவரே சிதம்பரம் பொன்னம்பல ஞான தேசிகர் ஆவார். இவரின் தந்தையார் ஆங்கிலேய இராணுவத்தில் பணியாற்றி வந்துள்ளார். இவர் பிறந்த காலத்தில் இவர்கள் வாழ்ந்த இடம் வடநாட்டில் உள்ள விஜயநகரம் ஆகும். இவரின் இளம் வயதிலேயே தந்தையார் இறந்துபோக, இவர் அன்னையார் அங்கம்மாள் இவரை நன்கு வளர்த்து வந்தார்.

இளமையிலேயே இறையுணர்வு பெற்றவராகப் பொன்னம்பலர் விளங்கினார். பள்ளிப்பருவத்தில் பள்ளி செல்லும் வழியல் உள்ள பிள்ளையாரை வணங்கிச் செல்வதும். அவருக்கு அபிடேக ஆராதனை செய்வதும் இவரின் வழக்கம். இவருக்கு இவரின் தாயார் தலையும், உடலும் செம்மைப் பட எண்ணெய் வழங்குவது வழக்கம். இந்த எண்ணெயைப் பிள்ளையாருக்கு எண்ணெய்க் காப்பு செய்து இவர் வணங்குவார். இதனால் இவரின் உடலும் தலையும் பசையற்றுக் காணப்பட்டன. இதன் காரணம் அறிய ஒரு நாள் இவருடன் தொடர்ந்து வந்த தாயார் இவர் செய்யும் பிள்ளையார் பூசையைக் கண்டார். இறைதொண்டை விட தன்

மகனின் உடல் நலம் கெடுவதை அவரால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. மகனைப் பொய்க் கோபம் கொண்டுக் கண்டித்தார். ஒரே மகனின் நல்வாழ்வினைக் கருத்தில் கொண்டு தாயார் செய்த செயல் இதுவாகும்.

பதினாறு ஆண்டுகள் ஆன நிலையில் ஞானம் தேடிப் பொன்னம்பலர், பொன்னம்பலமான சிதம்பரத்துக்குத் தனியே வந்து சேர்ந்தார். சிதம்பரம் திருக்கோயிலில் அனைத்து இறைபணிகளையும் அவர் செய்தார். கோயில் தூய்மை செய்தல், மலர் பறித்துக் கொண்டு வந்து தருதல், தீபாராதனைக்கு உரிய பொருள்களைக் கழுவிச் சுத்தம் செய்தல் போன்ற பல பணிகளை அவர் தொண்டாகச் செய்தார். இவரின் தொண்டால் இறைவன் மகிழ்ந்தான். சிதம்பரத்தில் சந்நியாசியாக விளங்கிய பெத்தாச்சி அடிகளாரின் அருந்துணை இவருக்குக் கிடைத்தது. இவர் இவருக்கு ஞான மார்க்கத்தை உபதேசித்தார்.

இவர் தன்னை உய்யும் நெறிக்கு உய்விக்கும் குருபிரானை நாளும் தேடி வந்தார். சிதம்பரம் சன்னதியில் ஓர் நாள் கழனிவாசல் என்னும் கோவிலூர் வேதாந்த மடத்தின் சீர் வளர் சீர் கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் சிதம்பரநாதனைத் தரிசிக்க வருகை புரிந்தார். அவரே தன்னைக் கரையேற்றும் ஞான குரு என்பதை உணர்ந்தார் பொன்னம்பலர். பெத்தாச்சி அடிகள் வழி காட்ட கோவிலூர் ஆதீனத்தின் முன் பணிந்து வீழ்ந்தார். தன்னை உய்யக் கொண்டு அருள வேண்டுகோள் வைத்தார். கோவிலூர் ஞான தேசிகரும் இவரை மாணாக்கராக ஏற்றுக் கோவிலூரில் மாணாக்கர் கூட்டத்துடன் இருக்க வழி செய்தார். கோவிலூரில் அனைத்து வேதாந்தப் பாடங்களையும் கேட்டு இவர் ஞானப் படிகளில் ஏறினார்.

பொன்னம்பலர் கற்றது மட்டும் இல்லாமல் தன் கூர்மையான அறிவால் மற்றவர்க்கு விளங்க வைக்கும் ஆற்றலும் பெற்றார். இதன் காரணமாக வேதாந்தப் பாடங்களை மறுமுறை பயிற்றுவிக்கும் ஆசானாக இவர் கோவிலூர் மடத்தில் விளங்கினார். அனைவரும் இவரைப் பொன்னம்பல ஐயா என்று விரும்பி அழைத்து மகிழ்ந்தனர்.

வடமொழி நூல்களைக் கற்க விரும்பிய பொன்னம்பலர் அதற்காக வட நாட்டு யாத்திரை மேற்கொள்ள குருபிரானிடம் வேண்டி நின்றார்.

குருவின் ஆசியால் இவர் காசி முதலான வடநாட்டுத் தலங்களுக்கு யாத்திரை மேற்கொண்டார். அங்கே இருந்து கிருஷ்ண சுவாமிகளிடம் பல நூல்களைப் பாடம் கேட்டார். அருங்கலை வினோதர் இந்தி மொழியில் எழுதிய விசாரசாகரம் என்னும் நூலை முழுவதும் தானே கற்றார். இவ்வாறு காசியில் வசிக்கும்போது ஒரு நாள் அன்னப் பூரணியை வணங்கச் சென்றபோது கூட்டமிகுதியால் இவரால் அருகில் சென்று வணங்க இயலவில்லை. தன் கையில் கொண்டுவந்த சந்தனத்தை எவ்வாறு அம்பிகைக்குச் சாத்துவது என்று எண்ணியிருந்த வேளையில் அதனைச் சற்று உயர்த்தி அம்பிகைக்கு முன்பு வீச அது அம்பிகையின் நெற்றியில் மங்கலமாகச் சென்று சேர்ந்தது. இறைவியின் கருணைக்கு இவர் பாத்திரமானதற்கு இதுவும் ஒரு சான்று.

இதன்பின் காசியில் பல நூல்களைக் கற்றார். விருத்திப்பிரபாகம் என்னும் ஒருலட்சம் பாடல்களைக் கொண்ட தொகுதி இவர் கைக்குக் கிடைத்தது. அதனைத் தெளிவுறப் படிக்கத் தன் சேமிப்பில் வைத்தார். காசிப் பயணம் வெற்றி பெற்ற நிலையில் கோவிலூர் திரும்பலானார்.

காசிச் செலவிற்குக் குருவளித்த பணம் அதிகமாகக் கையில் இருந்த நிலையில் அதனைக் கோவிலூருக்கே செலுத்த வேண்டி தயிர்சாதக் கட்டளையை நிறுவினார். மேலும் திருநெல்லை அம்மன் குதிரை உற்சவத்திற்குத் தேவையான உடைகளையும் வடநாட்டில் இருந்து வாங்கி வந்து சேர்த்தார். சென்னை வந்து சேர்ந்து சில நாள்கள் அங்கிருந்து பொன்னம்பலர் அந்நாளில் வித்யாரண்ய முனீந்திரர் எழுதிய பஞ்சதசி என்னும் நூலை தமிழில் ஆக்கி அச்சில் ஏற்றி வெளி யிட்டார்.

கோவிலூர் வந்து தன் குருவின் பாதங்களில் கங்கை நீரையும், சிவ திருநீற்றையும் துளவத்தையும் வைத்து வணங்கி ஆசி பெற்றார். இந்நிலையில் குருபிரானுடன் அவரும் பயணிக்கும் அருமைப் பேற்றைப் பெற்றார். இவர்கள் திருவாவடுதுறை மடத்திற்குச் சென்றபோது வேதாந்த மாணவர்தம் சிறப்பறிய விளக்கம் அளிக்க வேண்டப் பெற்றது. அப்போதுபொன்னம்பலர் அப்பணியைத் திறம்பட செய்துப் பாராட்டப்பெற்றார். பிரம்ம கீதையில் இருந்து சில பகுதிகளை விளக்கம் செய்து, தமிழ், வடமொழி

இரண்டிலும் மேற்கோள் உரைத்து சிறப்புற விளக்கம் அளித்தார் பொன்னம்பலர். கோவிலூர் வந்தபின் பிரம்ம கீதைக்கு நல்ல உரை எழுதப் பணிக்கப்பெற்ற பொன்னம்பலர் அதனையும் சிறப்புடன் செய்தார்.

இந்நாளில் குருபிரானின் முக்திப் பேறு நிகழ்ந்தது. பொன்னம்பலர் ஆண்டவர் சன்னதிக்கு முன்பாகக் குருபிரானின் நிறைவு இருக்கையை அமைத்து அவருக்குச் சன்னதி எழுப்பினார். கோவிலூர் மடத்திற்கு அடுத்த பட்டம் யாரென்ற நிலை எழுந்தது. அம்மடத்தின் நியமபப்படி நகரத்தார் குருபீடமாதலால் தன்னுடன் உடன் உறைந்து வரும் இராமசாமியாரை, நான்காம் பட்டமாக ஞான தேசிகராக ஆக்கி இவர் மகிழ்ந்தார்.

இதன்பின் பொருள்வைத்த சேரிக்குச் சென்று அங்குச் சில நாள்கள் தங்கினார். அங்குத் தன் குருவான சீர் வளர் சீர் கருணாநிதி சுவாமிகளின் பாதுகைகளை வைத்து நாளும் பூசித்து வந்தார். இச்செயல் பரதன் இராமன் பாதுகைகளை வைத்து வணங்கிய காட்சியை அனைவருக்கும் நினைவு படுத்தியது.

தொடர்ந்து, திருவாரூர் தட்சிணாமூர்த்தி மடம், திருமழபாடி மடம், புனல்வாசல் மடம் போன்றவற்றில் இருந்துத் தன் வேதாந்தப் பணிகளைச் செய்துவந்தார். புனல்வாசலில் இருந்த காலத்தில் மடமொன்று அமைக்க முயற்சி செய்தார். அதற்கான செங்கல் சூளை அமைக்கப்பட்டது. ஆனால் அந்தச் சூளை நிறைவேறும் தருவாயில் பொன்னம்பலருக்குச் சூலை நோய் வந்து சேர்ந்தது. இந்நோய் தீராது வருத்தம் செய்தது. இந்நேரத்தில் சிதம்பரம் சென்றால் நோய் தீரும் என்று எண்ணிய பொன்னம்பலர் மீண்டும் சிதம்பரம் வந்தார். அங்கு ஒரு தீட்சிதரின் வடிவில் பெருமான் நடராசரின் குஞ்சித பாதத்தில் சூட்டப்பெற்ற மாலையையும், அம்பலவாணரின் திருநீறும் தந்தார். வாங்கி அணிந்து பசுபதி கோயில் மடம் வர நோய் முற்றிலும் நீங்கியது. சூலை தந்து அப்பரைப் பெருமான் ஆட்கொண்டான். அதே நிலை இவருக்கும் எய்தியது. நீறளித்துச் சம்பந்தர் சூலை நோய் தீர்த்தார். அதே போல இவருக்கும் நீறு பெற நோய் தீர்ந்தது.

சிதம்பரத்தில் பொன்னம்பலருக்குத் தனிமடம் அமைக்க காரைக்குடி முரு. ராம. ஆவிச்சிச்செட்டியாரின் குடும்பத்தார்

உதவினார். தான் இறக்கும் தருவாயில் ஆவிச்சி செட்டியார் பொன்னம்பலருக்கு உதவிட வழி காட்டினார். அதன்படி அவரின் குடும்பத்தார் மடம் அமைத்துத் தர அதில் கருணாநிதி சுவாமிகளின் பாதுகைகளை நிறுவி நாளும் பணி செய்து வந்தார் பொன்னம்பலர். பொன்னம்பலத்தில் பொன்னம்பலப் பேர் கொண்ட சிதம்பர குருவிற்கு பொன்னம்பலனார் கோயில் நிறுவினார். இம்மடத்திற்கும் கோவிலூர் சிதம்பர சுவாமிகள் மடம் என்றே தன் குருவின் பெயரை வைத்தார் பொன்னம்பலர். இம்மடத்தின் திறப்பு விழாவிற்கு இராமசாமி ஞான தேசிகர் வருகை தந்து ஆசியருளினார்.

மடத்துப் பணிகள் செம்மையுற நடந்து வர இவர் ஞானப் பணிகளில் ஈடுபட்டார். எப்போதும் ஒலை வாசித்தும் ஒலை எழுதியும் இவர் வேதாந்தப் பணி செய்து வந்தார். பரமாரத்த தரிசனத்திற்குத் தக்க உரை கண்டார். தாண்டவராயர் எழுதிய கைவல்ய நவநீதம் நூலுக்குப் பலரும் பலவகையில் உரை செய்திருக்க இவர் அவற்றைப் பொய் உரைகளாக்கி மெய் உரை ஒன்றை எழுதினார். அதுவே என்றும் நிற்கும் மெய் உரையாயிற்று. வேங்கடநாதர் இயற்றிய பிரபோத சந்திரோதயம் என்பதையும் அச்சிட்டார். மேலும் இவர் சிவப்பிரகாசரின் வேதாந்தச் சூடாமணிக்கு மறைபொருள் விளக்கம் என்று உரை கண்டார்.

சிதம்பரத்தில் பல வேத பாடசாலைகள், பசுமடங்கள், வித்யாசாலைகள் ஏற்பட வழி செய்தார். மேலும் பொன்னம்பலத்திற்குப் பொன்னோடு வேய்ந்துப் புதிதாக அளித்தார். திருப்புலீச்சுரத்தில் இருந்த கோயில், குளம் ஆகியவற்றைச் சீர் செய்து புதிதாக்கினார்.மேலும் சுப்பிரமணியன் செட்டியாருக்கு ஏற்பட்ட கண் நோயை நீக்கினார். அவர் செல்வம் பலவும் அள்ளித் தந்து பொன்னம்பலர் மாணவர் ஆனார். இவரின் செல்வத் துணை கொண்டு தத்துவராய சுவாமிகளின் நிறைநிலை இருந்த இறும்பூதூர் (எறும்பூர்) தலத்தினைச் சீர்மை செய்தார்.

கோவிலூரில் சீர் வளர் சீர் இராமசாமி ஞானதேசிகர் முக்திப் பேறு அடைந்த நிலையில் வீரசேகரரை அடுத்த பட்டமாக்கிட இவரின் சொல்லும் துணை நின்றது. இவ்வாறு மூன்று கோவிலூர் ஆதினங்களின் அருமைக்கும் பெருமைக்கும் காரணமாக இவரின்

துணை அமைந்தது. வீரப்ப சுவாமிகள் தன் பால் பயின்றவர் என்றாலும் அவரிடத்தில் ஊழியன் பொன்னம்பலவன் என்ற நிலை யிலேயே தனது அன்பைக் காட்டி வந்தார் பொன்னம்பலர்.

கோவிலூருக்கு உரித்தான களத்தூர் கிராமத்தில் மழை இன்றி வறட்சி ஏற்பட்ட நிலையில் பொன்னம்பலர், வீரசேகர ஞான தேசிகர் ஆகியோர் சென்று அங்கு மழை வர வேண்ட மழை வந்து சேர்ந்த அதிசயமும் நடைபெற்றது.

அதுபோல் மடத்திற்கு அண்டி வந்தோரை இவர் சிவ பரம்பொருளாகவே கண்டார். பல நாள்களில் இரவில் வரும் அடியார்களை நோயுற்றாரைத் தன் நினைவால் உணர்ந்து அவர்களுக்கு உதவி செய்யச் சொல்லி அவர்கள் உண்டு உறங்கிய பின்பே தான் உறங்குவார் பொன்னம்பலர். பொருள் வைத்த சேரி மடம் கோவிலூரில் இருந்து பிரிவுபடும் நிலை வந்த காலத்து அதனைக் கோவிலூருக்கே உரிமையாக்கியவர் பொன்னம்பலர். மேலும் தனக்குப் பின்னால் சிதம்பர மட உரிமையைக் கோவிலூர் மடத்திற்கே ஆக்கி பத்திரம் பதிந்தார்.

எழுபத்து மூன்றாண்டுகளாக ஞான வழி நடந்து வந்த பொன்னம்பலருக்கு முக்திப் பேறு அடையும் நாளும் வந்தது. கலியாண்டு 5006, குரோதி ஆண்டு ஐப்பசி திங்கள் தீபாவளித் திருநாளன்று பொன்னம்பல சுவாமிகள் நிறைநிலை பெற்றார். அவரின் திருமேனி சிதம்பரம் மடத்தில் தென்பாகத்தில் வைக்கப் பெற்றுத் திருக்கோயில் கொண்டுள்ளது.

## நல்வழி பாடல்கள்

பாடல் 25

ஆன முதலில் அதிகம் செலவானால்

மானம் அழிந்து மதிகெட்டுப் போனதிசை

எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்

நல்லார்க்கும் பொல்லனாம் நாடு

விளக்கம்

ஒருவன் தன் வருவாயை விட அதிகம் செலவு செய்தால், அவன் கடன் வாங்கி தன் மானத்தை இழந்து, சொந்த புத்தியை இழந்து போக வேண்டிய சூழல் ஏற்படும் , போகும் திசை எல்லாம் அவனை எல்லாரும் திருடனைப்

போல் பாவித்து அவனிடம் பேச தவிர்ப்பர், ஏழு பிறப்புக்கும் தீயவனாய், நல்லவர்களுக்கு ஆகாதவனாய் மாறி விடுவான். ஆதலால் வருவாய்க்கு அதிகமாகச் செலவு செய்யக்கூடாது.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

## பகுதி-15

## திருவடி தொழுத படலம்

(52 பாடல்கள்)



முனைவர் சரசுவதி இராமநாதன்,
பள்ளத்தூர்

1. அனுமன் 'கண்களால்' கண்டனன் என்றான் "இராமா! நீ தெய்வம், அவதாரம், கால்தரைத் தோய நின்று கண் எதிரே மனிதனாகக் காட்சி தரும் திருமாலெனப் புரிந்து கொண்ட என் மெய்யுணர் கண்களால் சீதை கற்புத்தெய்வம் எனக் கண்டு கொண்டேன்.

2. நீ சொன்ன அடையாளங்கள் சீதையிடம் தெரியவில்லை. எல்லா உறுப்புகளும் இளைத்து மெலிந்திருந்தாள். கண்கள் மட்டும் இளைக்கவில்லை. அதை வைத்து அறிந்தேன்.

3. அரக்கியர் கண்கள் குடித்துக் களித்துச் சிவந்திருந்தன. இவரது கண்கள் அழுது கலங்கியிருந்தன. உன் பிரிவால் மழைக்கண்கள் காரணப் பெயராயிற்று.

4. அவரது கண்களில் அரக்கன் தசமுகனோ, அரக்கியரோ, மரமோ நானோ தெரியவில்லை. அவர் கண்களில் ஸ்ரீ ராமா நீங்கள் மட்டுமே இருந்தீர்கள் வால்மீகி சொன்ன கருத்து இது.

"நைசா பஸ்யதி ராகூஸ்ய, நேமான் புஷ்ப பல தருமான்

ஏகஸ்த ஹ்ருதயா நூனம், ராமம் ஏவ அனுபஸ்யதி"

"தையல் கண்ணிலும் உள" நீ

ஆகவே, கண்களால் கண்டு தெரிந்து தெளிந்தேன் என்றான் அனுமன்!.

## தவம் செய்த தவம்

உன் பெருந்தேவி என்னும் உரிமைக்கும் உன்னைப் பெற்ற தசரதன் மருமகள் எனும் வாய்மைக்கும், மிதிலையரசன் ஜனகனின் மகள் என்ற தகுதிக்கும் பெருமை சேர்த்தாள். பொன்னுக்கு ஈடு பொன்தான் வேறில்லை. பொறுமையில் சீதைக்கு நிகர் சீதை தான். அவனை மனைவியாய் பெற்ற உன்னையல்லாது உனக்கு ஈடு யாருமில்லை. அவனைக் கண்டு வணங்கி வாழ்த்துப் பெற்ற எனக்கு ஈடு நானே எனும் மதிப்பைத் தந்தாள். உன் குலம் இனி இஷவாகு குலம் அன்று இராகவன் குலம். இனி மங்கையர் குலமெலாம் 'ஸ்ரீ' எனும் திருமகள் குலமே. அரக்கர் குலத்தைக் கூற்றுக்கு ஈயவும், வானவர் குலத்தை வாழ்விக்கவும் தவம் செய்கின்றாா். இராமா ! நான் ஒரு பெண்ணைப் பார்த்தேன் ! இல்லையே ! குடிப்பிறப்பு, பொறுமை, கற்பு இவை ஒரு வடிவெடுத்து இருந்ததையன்றோ கண்டேன் !

'விற்பெருந் தடந்தோள்வீர வீங்குநீ ரிலங்கை வெற்பில்

நற்பெரும் தவத்தளாய நங்கையைக் கண்டே னல்லேன் !

இற்பிறப் பென்பதொன்றும், இரும்பொறை என்ப தொன்றும்

கற்பெனும் பெயர தொன்றும் களிபாடம் புரியக் கண்டேன்'

என்றான் சொல்லின் செல்வன் !. ஷேக்ஸ்பியரின் பன்னிரண்டாவது இரவு நாடகத்தில் வயோலா என்ற பெண்ணை,

'she sat like patience on a movement smiling at give '

என்று வர்ணிப்பார். (பொறுமை, இரக்கம், ஒரு வடிவெடுத்துத் துயரத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தது போல் இருந்தாளாம்).

சீதாதேவியின் கண்ணில், கருத்தில், ஏன் மன்மதன் எய்த அம்புபட்ட புண்ணிலும் ஸ்ரீ ராமா ! நீங்களே இருந்தீர்கள். சீதா தேவி ' உம்பி புல்லினால் தொடுத்த தூய சாலையில் இருந்தாள், ஐய ! தவம் செய்த தவமாம் தையல்" என்றது அழகு ! இராவணன் தொட்டுத் தூக்கவில்லை. இலக்குவன் கட்டிய பர்ணசாலையினோடு கொண்டு சென்றான். சீதை தவம் செய்யத் தவம், தவம் செய்தது ! மண்ணோடு அகழ்ந்து கொண்டு போனான் தசகண்டன். சீதையை அவன் தொடவில்லை. விரும்பாத பெண்ணை அவன் தொட்டால்



யாரால் முடியும்!

அரக்கிகள், அளவற்றோர்கள் அலதை (பேய்)க் குழுவும் அஞ்சும்படி உரத்துப்பேசி, அதட்டித் துன்புறுத்தினார். உன்மீது கொண்ட நேசமே அச்சத்தை நீக்கிட இரக்கத்துக்குரிய நிலையில் சீதையைக் கண்டேன். கண்ணின் நீர்க்கடலில் மிதந்த உன் தேவியை நான் பார்த்தேன்.

இலங்கை முழுதும் தேடி, இராவணன் இருக்கை, அரண்மனையெனப் பல இடங்களிலும் திரிந்தபின் அசோகவனத்தில் கற்பு ஒளியைக் கண்டேன்.

இத்தனை கொடிய அரக்கர், அரக்கியர், காமுகன் தசமுகன் இவர்களுக்கு மத்தியில் உன் தேவியை அவளது கற்பும், உன் அருவும் ஸ்ரீ தூய நல்லறமும் தான் காத்து நிற்கிறது என்பதைப் புரிந்து கொண்டேன்.

உயிர் துறக்கப் போன சீதையை (நானும் தொட முடியாதே என்பதால்) உன் நாமத்தை உரைத்தே, உயிரை விட்டு விடாமல் காத்தேன். 'வஞ்சனை அரக்கர் செய்கை

தலை பத்தும் சிதறியிருக்கும். பிரம்மன் தந்த சாபம்! பூமி கிழியவில்லையே! அனந்தனின் தலை வெடிக்கவில்லையே! இரவி, மதி வீழ்ந்து சிதறவில்லையே! சீதை எனும் கற்பரசியை இராவணன் தொடவில்லை. தொட்டிருந்தால் இத்தனை விளைவுகள் நிகழ்ந்திருக்கும் சீதை அசோகவனத்தில் சோகத்துடன் இருந்தாள். அவளால் மங்கையர் இனமே உயர்ந்தது. பாகத்திலிருந்த பராசக்தி ஈசுவரனின் முடிமீது அமர்ந்துவிட்டாள். அகத்திலே (நெஞ்சத்திலே) அமர்ந்திருந்த அலைமகள் இலட்சுமி, ஆயிரம் மௌலிக்கு மேல் ஏறி அமர்ந்தாள். இதற்கு மேல் பெண் குலத்தை உயர்த்த வேறு

இதுவென மனத்தில் நினைத்தாள் போலும்!” நீ யாரோ தெரியாது. யாராயினும் எம்பிரான் நாமம் சொல்லி உருக்கினாய் உணர்வை உயிர்தந்தாய்! எனக் கூறினான். நான் அடையாளங்கள் சொல்லச் சொல்ல நம்பிக்கை கொண்டாள் கணையாழியைக் காட்டினேன் தேவா! அது உயிர் காக்கும் அருமருந்தானது!. அதைப் பெற்றுக்கொண்ட அன்னையின் உணர்ச்சிப் பிரவாகத்தை எப்படி வர்ணிப்பேன். கண்ணீரால் கணையாழியை நீராட்டி விட்டாள் ஜானகி மாதா! ‘வஞ்சகர் ஊருக்கு வந்துவிட்டதே இந்தப் பவித்திரமான மோதிரம்! என்று கண்ணீரால் (அன்பு எனும் அம்பு) (அப்பு, அம்பு என்று நீருக்குப் பெயர்கள் உள!) நீராட்டி விட்டாள். மெலிந்தாள், உடனே தடித்தாள். மோதிரம் விரகத்தீயால் உருகியது. உன்னை அடைந்து விட்டோம் என்று கொண்ட மன மகிழ்ச்சியால் குளிர்ச்சியடைந்து முன்போல் இறுகியது!

அன்னை சில அடையாளங்களைச் சொல்லச் சொன்னாரென எல்லாவற்றையும் விளக்கமாகச் சொன்ன அனுமனை அனைவரும், கண்மூடாமல் வாய்திறந்து பார்த்திருந்தனர்.! இன்னும் ஒரு



திங்கள் உயிர்காத்திருப்பேன்! அதோடு என் தவம் முடிந்துவிடும். அதற்குள் வந்து என் நாயகர் என்னை அழைத்துச் செல்லுமாறு வேண்டு!” என்றார் தேவி. அவரது அணிகலன் இதோ எனச் சூளாமணியினை நீட்ட இராமன் பெற்றுக் கொண்டு உணர்ச்சி வெள்ளத்தில் தத்தளித்தான். திருமண நாளில் சீதை கரத்தை முதலில் தொட்டபோது கண்ட அதே இன்ப அதிர்ச்சி! பெருமூச்சு விட்டான். உரோமங்கள் சிலிர்த்தன. பேச வார்த்தை வரவில்லை.

‘சீதை கிடைத்துவிட்டாலென அனைவரும் உற்சாகம் பெற்றனர். அனுமனைப் போற்றித் துதித்தனர்! நாமும் துதிப்போம்!

# ஆழ்வார்கள் - ஓர் அறிமுகம்

## ஆழ்வார்கள் ஓர் அறிமுகம்

திருமாலினுடைய பக்தியில் – அன்பில் – அழகிய தோற்றத்தில் ஆழ்ந்தவர்கள் ஆழ்வார்கள். மொத்தம் 12 ஆழ்வார்கள் . 63 நாயன்மார்கள் போல அவர்கள் திருமால் பக்தியில் திளைத்துப் பாடிய தமிழ்ப் பாசுரங்கள் 4000 என்று கூறுவார்கள். தமிழை முன்னிறுத்தி பக்தியைப் பரப்பியவர்கள். இந்தப் பாசுரங்களை நான்கா யிரம் திவ்ய பிரபந்தம் என்பார்கள். சைவர்களுக்குத் திருமுறை எப்படியோ, வைணவர்களுக்கு நான்காயிரம் திவ்ய பிரபந்தம் அப்படி. இந்தப் பாசுரங்களையெல்லாம் 10 ஆம் நுற்றாண்டில் நாதமுனிகள் என்ற (ரெங்கநாத முனிகள்) அருளாளர் ‘நாலாயிரப் திவ்யப் பிரபந்தம்‘ என்ற பெயரில் தொகுத்தார்.

இந்தப் பாசுரங்கள் எல்லாம் நாராயணனையே பரம்பொருளாகக் கொண்டு பாடப்பட்டவை. 108 வைணவத் திருத்தலங்களில் உள்ள திருமாலை இவர்கள் பாடித் துதித்தார்கள். ஆழ்வார்களால் பாடல் பெற்ற இந்தத் தலங்களைத் திவ்ய தேசங்கள் என்பார்கள். ஆழ்வார்கள் அடைந்த பேரானந்தத்தின் விளைவு 4000 திவ்யப் பிரபந்தங்கள். இந்தப்



டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன்,
ஈப்போ, மலேசியா

பாசுரங்களின் இனிமையில் பெருமாள் கட்டுண்டு கிடந்தாராம்.

ஆழ்வார்களின் பக்தியைப் போல் அவர்களுடைய தமிழும் இனிமையானது.

“மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத

முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தல்கீழ்

மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்

கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன்









தோழி”

என்ற ஆண்டாளின் தமிழைப் படிக்கும் போதே இனிமையாக இருக்கும்.

இன்னும் சொல்லப் போனால் வைணவர்கள் தமிழுக்குத் தனி இடத்தை இந்தத் திவ்யப் பிரபந்தங்களின் மூலம் கொடுத்துள்ளனர். வைணவக் கோவில்களில் பெருமாள் திருவீதி உலா போகும் பொழுது, பெருமாளுக்கு முன்னால் திவ்யப் பிரபந்தங்களான தமிழ்ப் பாசுரங்கள் பாடிக் கொண்டு செல்வார்கள். அதற்குப் பின்னால்தான் பெருமாளும், வேதமந்திரக் கோஷங்களும், நாலாயிர திவ்யப் பிரபந்தங்களைப் பாடுவதற்காகவே வைணவக் கோவில்களில் அரையர்கள் என்ற இறைத் தொண்டர்கள் வழி வழியாகச் சேவை செய்கின்றனர். நாலாயிர திவ்ய பிரபந்தங்களை அபிநயத்துடன் தாள ஒலிக்கேற்ப ஆடிப் பாடுகின்ற இவர்களுடைய நிகழ்ச்சி அரையர் சேவை என்றழைக்கப்படுகின்றது. ஏறக்குறைய ஓதுவார்களைப் போல் காலங்காலமாக இந்த அரையர்கள் மரபு தவறாமல் பெருமாளுக்குச் சேவை செய்து வருகின்றனர்.

ஆழ்வார்கள் வாழ்ந்த காலம் ஏறக்குறைய 5ஆம் நூற்றாண்டு முதல் 9ஆம் நுற்றாண்டு வரை. (ரங்கநாத முனிகள் வாழ்ந்த காலம் 10ஆம் நூற்றாண்டு).

## 12 ஆழ்வார்கள்

முதல் ஆழ்வார்கள் – 5,6ஆம் நூற்றாண்டு (கடைச்சங்க காலம்)

1. பொய்கையாழ்வார்
2. பூதத்தாழ்வார்
3. பேயாழ்வார்

## AZHWAR GOSHTEE



Kulashekar Alwar (Tiruvanjikalam)
குலசேகராழ்வார் (திருவஞ்சிக்களம்)



Peri Alwar (Srivilliputtur)
பெரியாழ்வார் (ஸ்ரீவில்லிபுத்தூர்)



Andal (Srivilliputtur)
ஆண்டாள் (ஸ்ரீவில்லிபுத்தூர்)



Tondar Adi Poodi Alwar (Mandangudi)
தொண்டரடிப் பொடி ஆழ்வார் (மண்டங்குடி)



Tiruppan Alwar (Uariyur)
திருப்பாணாழ்வார் (உறையூர்)



Tirumangai Alwar (Tirukkuraiyalur)
திருமங்கை ஆழ்வார் (திருக்குறையலூர்)

(முதலாழ்வார்கள் என்று சொல்வார்கள். வேத – உபநிஷத்தின் சாரங்களைப் பாடினார்கள்.)

### 4 திருமிழிசையாழ்வார்

பார்க்கவ முனிவருக்கும் அவர் மனைவி கனகாங்கியாருக்கும் மகனாகப் பிறந்தவர். பிறக்கும் பொழுது ஒரு பிண்டமாக இருந்தார். ஒரு மூங்கில் மரத்தடியில் வைத்துச் சென்றனர். மூங்கில் பிரம்பு விற்பவரின் வளர்ப்பு மகனாக வளர்ந்தார். சைவராக இருந்தவர். பேயாழ்வாரிடம் பாடம் கேட்டவர். யோகம் தெரிந்தவர். பிரணவ மந்திரத்தின் பொருளைப் பாடியவர். சந்தப் பாடலுக்கு முன்னோடி எம்பெருமானைத் தன் நண்பனாக நினைத்துப் பாசுரங்கள் பாடியவர். தன் வளர்ப்புப் பெற்றோருக்குப் பிறந்த கணிகண்ணனைச் சீடராகப் பெற்றவர்.

இவர் ஒரு முறை காஞ்சிபுரத்தில் திருவெஃகா என்ற திருத்தலத்தில் ஆசிரமத்தைச் சுத்தம் செய்த வயதான பெண்ணை, இளமையாக மாற்றினார். இவளின் அழகில் மயங்கிய பல்லவ மன்னன், தனது மனைவியாக்கினான். தானும் இளமையாக மாறுவதற்கு மன்னன் திருமிழிசையாழ்வாரின் சீடன் கணிக்கண்ணனிடம் வழி கேட்டார்.

ஆனால் எல்லாருக்கும் ஆழ்வார் இளமை வரம் தரமாட்டார் என்று கூறவும். மன்னன் கணிகண்ணனை நாடு கடத்தினார்.

இதனை அறிந்த ஆழ்வார், சீடனுடன் தானும் வெளியேறுகிறார்.

காஞ்சிபுரம் எல்லையில் திருமழிசையாழ்வார் பெருமாளையும் அழைக்கிறார். பக்தர் இருவர் அவமானப்பட்டுச் செல்கிறோம்.

அவர்களோடு தானும் வராமல், சிரித்துக் கொண்டு பாம்புப் பாய் மீது படுத்துக் கொண்டிருக்கும் பெருமாளே! நீயும் எங்களுடன் வந்துவிடு என்கிறார்.

“கணிகண்ணன் போகின்றான் காமரு பூங்கச்சி

மணிவண்ணா நீ கிடக்க வேண்டா துணிவுடைய

செந்நாப் புலவன் யான் செல்கின்றேன் நீயும் உன்தன்

பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்!.

பாயைச் சுருட்டி பின்னாடி நட என்கிறார். பெருமாளும் வருகிறார். பக்தனுடன் இரவில் ஊர் எல்லையில் தங்குகிறார். அந்த இடத்தின் பெயர் “ஓர் இரவு இருக்கை (ஓரிருக்கை) வந்த பெருமாளின் பெயர், “சொன்ன வண்ணம் செய்த பெருமாள்”.

மன்னன் தவறினை உணர்ந்தான். மன்னிப்புக் கேட்டான். கணிகண்ணன் திரும்புகின்றார். பெருமாளையும் திரும்ப காஞ்சிபுரம் அழைத்தார்.

“கணிகண்ணன் போக்கொழிந்தான் காமரு பூங்கச்சி

மணிவண்ணா நீ கிடக்க வேண்டும் துணிவுடைய

செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்

பைந்நாகப் பாய் படுத்துக் கொள்”

## 5.பெரியாழ்வார்

6ஆம் நூற்றாண்டு இயற்பெயர் “விஷ்ணுசித்தர் பட்டர்பிரான் என்பார்கள். ஸ்ரீ வில்லிபுத்தூர் வட பத்திர சாயி கோவிலில் பூமாலை தொடுத்து இறைவனுக்குச் சூட்டுவார்.

ஏன் பெரியாழ்வார்?

வயதால் அல்ல

இறைவனையே குழந்தையாக நினைத்து ஒரு தாயின் அன்பைப் போல் இறைவனிடம் அன்பு செலுத்தியவர்.

தன்னை யசோதையாக மாற்றிக் கொண்டு கண்ணனைக் கொண்டாடியவர்

கண்ணனைத் தொட்டியில் இட்டு தாலாட்டுகிறார்.

“மாணிக்கம் கட்டி வயிரம் இடை கட்டி

ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறுத்தொட்டில்

பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்

மாணிக் குறளனே தாலேலோ

வையம் அளந்தானே தாலேலோ!

வையம் அளந்தானே தாலேலோ!” என்று கண்ணனுக்குத் தாலாட்டும் பாடியதால், ஆழ்வார்களுள் பெரியவர்.

கண்ணன்மேல் அவ்வளவு அன்பு. கண்ணனுக்குக் கண் பட்டு விடுமென்று, திருப் பல்லாண்டு

பாடுகிறார்.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயி ரத்தாண்டு

பலகோடி நூறாயிரம்

மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்

செவ்வடி செவ்விதிருக் காப்பு (1)

இறைவனுக்கே கண்ணேறு கழிக்க மனம் கொண்ட இவரது பக்தியின் மேன்மையால், காலத்தால் சிறிது பிந்தியதாக இருந்தாலும் இவரது பாசுரங்கள் திவ்யப் பிரபந்தத்தில் முதலிடம் பெறுகின்றன.

இவர் ஆண்டாள் நாச்சியாரை வளர்த்ததால், மாதவப் பெரியாழ்வார் என்றும் சிறப்பிக்கப்படுகிறார்.

## 6 ஆண்டாள் நாச்சியார்

9ஆம் நூற்றாண்டு. பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள், ஸ்ரீ வில்லியுத்தூர் நந்தவனத்தில் ஒரு துளசிச் செடியின் அடியில் கிடைக்கப் பெற்றவர்.

கண்ணனைக் காதலித்தவர் ; கட்டிய மாலைகளைத் தான் சூடி அழகு பார்த்து பின் கண்ணனுக்கு கொடுத்து "சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாள்" கண்ணனையே அடைய வேண்டுமென்று, மார்கழியில் நோன்பிருந்து, திருப்பாவை பாடியவர். பங்குனி உத்திரத்தில் ஆண்டாள் ரெங்க மன்னாருடன் ஒன்றரக் கலந்தார்.

## 7 தொண்டரடிப்பொடி ஆழ்வார்

திருவரங்கப் பெருமாளைத் தவிர வேறு எந்தப் பெருமாளையும் பாடாதவர். விப்பிர நாராயணர் இயற்பெயர்.

பச்சை மாமலை போல் மேனி

பவளவாய்க் கமலச் செங்கண்

அச்சுதா அமரர் ஏறே

ஆயர்தம் கொழுந்தே என்னும்

இச்சுவை தவிர யான் போய்

இந்திர லோகம் ஆளும்

அச்சுவை பெறினும் வேண்டேன்

அரங்கமா நகருளானேன்

என்று ஸ்ரீ ரங்கப் பெருமாளையே பற்றியவர். அரங்கனைப் பாடிய வாயால் அந்தக் குரங்கனைப் பாடப் மாட்டேன். என்றவர்.

## 8 திருமங்கையாழ்வார்

8ஆம் நூற்றாண்டு ஆழ்வார்களில் அதிகமான திவ்ய தேசங்களைப் பாடியவர். இவரது பாசுரங்களைக் கேட்க இறைவனே இவரைத் தொடர்ந்து வந்தாராம். ஏழைகளுக்கு உணவிடுவதற்காகக் கொள்ளையடித்தாராம். தன் உணவிற்காக யாசகம் செய்தாராம்.

## 9 திருப்பாணாழ்வார்

எட்டாம் நூற்றாண்டு . பாணர் குலம், திருச்சி

பத்துப் பாசுரங்கள் பாடி திருவரங்கப் பெருமான் திருவடிகளில் புகுந்தவர்



திருப்பாணாழ்வார். கண்ணனைக் கண்ட கண்களால் வேறு எதையும் காண மாட்டேன் என்று பாடி கண்ணனிடம் கலந்தவர்.

### 10 குலசேகராழ்வார்

சேர மன்னராக இருந்து ஆழ்வாரனவர். சோழ, பாண்டிய மன்னர்களை வென்று தமிழகத்தை ஒரு குடையின் கீழ் ஆட்சி செய்தவர். பாண்டிய மன்னனின் மகளை மணந்தவர். ஒரு கட்டத்தில் இவருக்கு ஆணவம் தலைதூக்க, திருமாலின் பால் ஆட்கொள்ளப்பட்டு மாயை விலகி, மனம் மாறினார்.

ராமாயணக் கதையைக் கேட்பதில் மிகுந்த நாட்டம் கொண்டவர், ஒரு தடவை, ராமாயணம் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுது, உணர்ச்சி வசப்பட்டு சீதையை அரக்கர்களிடமிருந்து மீட்க தன்னுடைய படையை உண்மை யிலேயே தயார் செய்தவர். ஒரு நாள் திடிரென்று நாட்டை ஆளும் பொறுப்பைத் தன் மகனிடம் கொடுத்து விட்டு பெருமாளைத் தரிசிக்க வைணவத் திருத்தலங்களுக்கு யாத்திரை சென்றார்.

“மன்னுபுகழ் கோசலை தன் மணிவ யிறு வாய்த்தவனே!

தென்னிலங்கை கோன் முடிகள் சிந்துவித்தாய்! செம்பொன் சேர்

கன்னி நன் மா மதில் புடை சூழ் கணபுரத்தென் கருமணியே!

என்னுடைய இன்னமுதே! இராகவனே! தாலேலோ!!”

என்று ராமனுக்குத் தாலாட்டுப் பாடுகிறார். இவர் திருப்பதிப்

பெருமாள் கருவறையில் படியாக இருக்க வேண்டினார்.

இல்லை, திருவேங்கடச்சுனையில் மீனாகவாவது பிறக்க வேண்டினார், அதுவும் முடியவில்லையென்றால், எம்பெருமான் பொன்மலையில் ஏதேனுமாகப் பிறக்க வேண்டும் என்று கேட்டாராம்.

இன்றைக்கும் வைணவக் கோவில்களில் கருவறைப் படி "குலசேகரனின் படி" என்று அழைக்கப்படுகின்றது.

## 11 நம்மாழ்வார்

9ஆம் நூற்றாண்டு தூத்துக்குடி மாவட்டம் "ஆழ்வார் திருநகரியில் பிறந்தவர். வெள்ளாளர் மிக அதிகமான பாசுரங்களை (1296) அருளியவர். வைணவத்தில் கோவில் என்றால் ஸ்ரீ ரங்கம். "ஆழ்வார் என்றால் அது நம்மாழ்வாரையே குறிக்கும். "உண்ணும் சோறும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் " என்றே வாழ்ந்தவர். வேதத் தமிழ் செய்த மாறன்.

"அவரவர் தமதமது அறிவு அறி வகைவகை

அவரவர் இறையவர் என அடி அடைவர்கள்

அவரவர் இறையவர் குறைவு இலர் இறையவர்

அவரவர் விதிவழி அடைய நின்றனரே !

## திருவாய் மொழி

ஒவ்வொருவரும் அவரவர் அறிவுக்கு எட்டிய இறைவன் திருவடியை அடைவார்கள். எந்த இறைவனும் குறையில்லாதவன். அவரவர் விதிப்படி அவரவர் இறைனை அடைவார்கள்.

## 12 மதுரகவி ஆழ்வார்

"குருகூர் நம்பி" என்று சொல்லக்கூடிய நம்மாழ்வாரின் திருவடிகளைச் சிக்கெனப் பற்றியவர். பிராமணர். நம்மாழ்வார் பாடப்பாட அவருடைய பாசுரங்களை எழுதி வைத்தவர். நம்மாழ்வார் பெருமாளின் குணங்களைச் சொல்லும் பொழுது, உணர்ச்சி மேலிட்டால் அவர் மூர்ச்சையாகி விடுவாராம்.

அவரை மதுரகவி ஆழ்வார் தான் தண்ணீர் தெளித்து மூர்ச்சையைத் தெளிவிப்பாராம், பெருமாளைப் பாடாமல் குருவான நம்மாழ்வாரைப் பாடி முக்தியடைந்தவர்.

## நிறைவு

ஆழ்வார்கள் அனைவரும் வெவ்வேறு காலக்கட்டத்தில் , வெவ்வேறு குலங்களில் பிறந்தாலும் 'நாராயண பரத்துவம்" என்ற ஒரு விஷயத்தில் ஒன்றுப்பட்டவர்கள். பக்தியால், மோட்சைமடைந்தவர்கள். அழியாத பக்தி இலக்கியத்தைத் தமிழுலக்குத் தந்தார்கள். அவர்களைப் போற்றி வணங்குவோம்.

## சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 10

## அப்பர் சாடிய குலமும் கோத்திரமும்



**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி

ஒன்றே குலம் மனிதர் குலம்; ஒருவனே தேவன் அவன் சிவன் என்று திருமூலர் அறுவுறுத்தியதை, “அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ அன்புடைய மாமனும் மாமியும்நீ ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ” என்று, அனைத்தும் சிவமென மாற்றியமைத்தார் நாவுக்கரசர். அடுத்தபடியாக, ஒருகுலமும் சுற்றமும் ஒரூரும்நீ (06.095.01) என்று சேர்த்தார். குலமெனில், சமூகத்தினருக்கான ஒரே குலம் சைவகுலமென்று ஒருமுகப்படுத்தினார் அவர்.

‘குண்டிகை தூக்கினார் குலந்தூரறுத்தே’ (05.058.02) என்று சமணர் குலத்தையும், கோச்செங்கணானைச் ‘சோழர் தங்கள் குலந்தனில் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனாரே’ (04.049.04) என்று சோழர் குலத்தையும் சுட்டி, ஒத்த நெறியுடைய பெருங்கூட்டத்தைக் குறிக்கவும் ‘குலம்’ என்ற சொல்லைப் பயன்படுத்தினார் நாவின் மன்னவர். அரிகுலம் மலிந்த அண்ணாமலை யுளாய் (04.063.06) என்று குரங்குக்

சம்பந்தரின் பதிவு.

## ‘குலம்’ சுட்டியவை வேறென்னென்ன?

மேன்மையுடை மலையாம் இமயத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட மலைமகள் ‘குலவரையின் மடப்பாவை’ என்றே போற்றப்படுகிறார்.

மேருமலையை வில்லாகக் கொண்டு மும்மதில்கள் எரியச் செய்த தலைவனை ‘குலவரையே சிலையாகக் கூரம்பு தொடுத்தானை’ (திருக்கச்சியேகம்பம்) எனுமிடத்தில், பெருமை பொருந்திய மலையைக் குறிக்கிறது குலவரை. திருச்செம்பொன்பள்ளியில், ‘குலவில்லால் எயில்மூன்றெய்த கூத்தரே’ என்று இறைவனின் அதே பெருமைமிகு செயலில் பங்கேற்ற வில் குலவில்லென உயர்வுக்கான முன்னொட்டைத் தாங்கி நிற்கிறது.

சேக்கிழாரும் கயிலை மலையைக் குலக்கிரி என்ற சொல்லால் சுட்டக் காணலாம். வாரணாசியில் வழிபட்டு மகிழ்ந்த நாவின் மன்னவர், அடுத்ததாக அரிய பெருங்காட்டைக் கடந்து கயிலைமலையில் இறைவனைக் காணும்பொருட்டு பயணத்தைத் தொடர்ந்தார். இந்தக் காட்சியைச் சேக்கிழார், ‘பெருங்கயிலைக் குலக்கிரி எய்துவார்,’ என்று கூறுகிறார்.

அடுத்து, குலம்பொல்லேன்

கூட்டத்தையும் ‘குலம்’ குறிக்கக் காணலாம். ஏன், கூட்டமாய்க் கிளர்ந்துவரும் அலைகளைக் ‘குலங்கிளரும் வருதிரைகள்,’ என்றும் காட்டினார்.

‘விறலரக்கர் குலங்கள்வாழு மூரெரித்த கொள்கை’ இதென்னவோ? என்று வலிமைபொருந்திய அரக்கர் கூட்டத்தைக் குலங்களென்கிறது

குணம்பொல்லேன் குறியும் பொல்லேன் (06.095.09) என்று நாவுக்கரசர் தன்னை நொந்து கொண்டதைப் பார்க்கிறோம். “நான் சேர்ந்த கூட்டத்தாலும் பண்புகளாலும் குறிக்கோளாலும் பொல்லாதவனாக, தீயவனாக உள்ளேன்,” என்றுரைக்கையில் ‘குலம்’ என்ற சொல் சேர்ந்த கூட்டத்தையே குறிக்கும்.

எனவேதான், ‘குலமிலராகிலும் குலத்துக்கேற்பதோர் நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே’ என்ற அடிகள், சைவம் தழுவாத கூட்டத்தினராயினும் சலமிலரான சங்கரர் தத்தம் பண்புகளுக்கேற்ப நலந்தருவார் என்றே பொருள்படும்.

பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த சிவஞான போதம், அப்பரின் இப்பாடலை விரித்துரைக்கக் காணலாம்.

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்

சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்ச் சார்ந்தடியார்

தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்

ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு

(சிவஞான போதம், 10.03)

தம்மைச் சார்ந்தாரை இறைவர் காத்தாலும், தம்மைச் சாராதவர்களுக்கும் சலமிலராய் வினைப்பயனை ஆய்ந்தருளுகிறார் எனும்போது, மனிதருள் வேறுபாடு பாராதவராகச் சிவபெருமான் இங்கும் காட்டப்படுகிறார். அன்பர்களுள் பிரிவினை நோக்காக் கடவுளென்று சிவபெருமானிடம் மக்களைக் கைப்பிடித்துக் கூட்டிச்செல்ல ‘சலமிலன்’ என்ற சொல்லை நாவுக்கரசர் கையாண்டதையே இது வலியுறுத்துகிறது.

திருச்சேறையிலுறையும் செந்நெறியான் கழலை மனதில் வைக்க பிறப்பு, மூப்பு, பசி, பிணி, இறப்பு நீங்கி இம்மையிலேயே இன்பம் கிட்டும் என்று பலவாறாக எடுத்துக்கூறி, “இறைவனிருக்கிறார், பின் அச்சமெதற்கு,” என்று திருச்சேறைப் பதிகத்தில் தோள்தட்டித் தொண்டர்களை ஊக்கப்படுத்தினார்.

குலங்களென் செய்வ குற்றங்களென்செய்வ துலங்கி நீநின்று சோர்ந்திடல் நெஞ்சமே (05.077.08) என்று, குலங்களின் அடிப்படையிலான சமூகப் பாகுபாட்டை எண்ணிச் சோராதிருக்குமாறு நெஞ்சுக்கு நிம்மதியளித்தார். குற்றமில்லாத் தலைவனால்தான் மக்களின் குற்றங்களை விலக்கமுடியும் என்பதால், ‘குற்றமில் குணத்தினானே கோடிகாவுடைய கோவே’ (04.051.01)

என்றே சிவனாரைப் பாடினார்.

செய்யத்தகாதன செய்யும் குற்றம் தனிமனிதத் தவறு. குலங்களின் அடிப்படையில் வேறுபடுத்தி ஒதுக்குவதோ சமூகக் குற்றம். குற்றம் புரிந்தவன் திருந்தி இறைவனை நாட, மனத்தினால் ஏற்படும் குற்றங்கள் நீக்குவது கடவுளர்க்குரிய பெருந்தன்மை. ஆனால், மனிதரால் இழைக்கப்படும் குற்றமாகிய குலப்பாகுபாட்டை உடைத்தெறியும் அப்பரின் ஆற்றல்மிகு தெய்வம், அவருடைய மறுமலர்ச்சி எண்ணம் படைத்த புதுமைத் தெய்வம்.

மனிதருள் வேறுபாடின்மையை நாடிய அப்பருக்கு அதை ஏற்காத சமூகம் பெரிதும் மனவுளைச்சலைக் கொடுத்ததுபோலும். தம்மைச் சுற்றியிருந்த மனிதர்களால் செய்யவியலாததை இறைவனைக் கொண்டே செய்துவைக்க முயன்ற ஆர்வலர் அவர்.

உலகத்து மாந்தரைக் குலத்தால் பிரித்துவைத்து நலம் வழங்காத சமூகத்தில், சைவகுலத்தைத் தழுவாதோருக்கும் நலம் கொடுப்பவர் நமச்சிவாயம் என்று அறுதியிட்டுச் சொன்ன அப்பர், குலத்தைக் கொண்டு மனிதர்களைப் பிரிப்பவர்களுக்கு வேறு வழியின்றி ஒரு தீர்வு தந்தார்போலும்.

இறைவர் ஒருவரே எனும்போது, அவரை வழிபடும் தொண்டரும் ஒரே குலத்தவராகத்தான் இருத்தல் வேண்டும். அதைத் தரவல்லவரும் அதே இறைவர்தான். ‘அடியவர்’ எனும் குலங்கொடுத்துக் துன்பம் நீக்க வல்லவர் சிவபெருமான், என்று திருநள்ளாற்றுப் பதிகத்தில் பொறித்து


திருநாவுக்கரசர்

வைத்த தொண்டர்களின் முதல் தலைவர் அப்பர். குலங்கொடுத்துத் துன்பம் நீக்கி தன்னை வழிபட்ட தாழ்ந்தோர்க்கெல்லாம் நலங்கொடுக்கும் நம்பியாக நள்ளாற்றானை நாவுக்கரசர் கண்முன் கொணர்ந்தார் (06.020.06).

### அடியாரில் இறைவனைக் காணும் அன்புநெறி

தொண்டர்களுக்கு வேண்டிய நெறிகளை இறைவன்மேலும் ஏற்றிவைப்பது அப்பரெனும் ஆசிரியரின் வழக்கம். அவ்வகையில், தொண்டர்கள் கற்றுத் தேர்ந்து வாழ்க்கைமுறையாகப் பற்றிக்கொள்ள வேண்டியவை அன்பும், அறமும், அறிவும், அறிவில் செறிவும், குற்றமற்ற மனமும், மனிதருள் வேறுபாடு காணாத போற்றுதற்குரிய தகைமையும் என்று நீண்ட பட்டியலிட்டால், அந்தப் பண்புகளெல்லாம் தொண்டர்கள் வழிபடும் தலைவனுக்கும் உண்டென்பதை அடிக்கடி வலியுறுத்தியவர் அப்பர்.

நகமெலாந் தேயக் கையா னாண்மலர் தொழுது தூவி

முகமெலாங் கண்ணீர் மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர்

அகமலாற் கோயி லில்லை யையனை யாற னார்க்கே(04.040.08)

எனும் அடிகளில் தொண்டின் உயர்வையும், திருத்தொண்டைக் கொண்டாடி அன்பர் மனமே கோயிலாக உறையும் இறைவனின் இணையில்லா மேன்மையையும் ஒருசேரவே காட்டினார். தம் சொற்களைக் கேளாமல் நின்றோரை “வந்து கேண்மின் மயல்தீர் மனிதர்காள்!,” என்றழைத்து, ‘சிந்தையால் நினைவார்களைச் சிக்கெனப் பந்துவாக்கிக் கொள்வார் விசயமங்கைப்பிரான்,’ (05.071.09) என்று பொறுமையாக விளக்கினார்.

இறைவனைச் சிக்கெனப் பிடித்து இறைவனின் உறவாக ஏற்கப்பட்ட தொண்டர்களை இறைவனாகவே பார்க்க அறிவுறுத்தினார். எக்காலத்தவரும் தம் எண்ணங்களை குழப்பமோ ஐயமோயின்றிப் புரிந்துணரும் வண்ணம்

அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்

ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்

கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்

அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே (06.095.10)

என்றுரைத்த பத்திமைப் பெருஞ் சுடர் திருநாவுக்கரசர். இங்கு, சமூகம் அறவே ஒதுக்கிவைத்த இரண்டு பகுதியினரைச் சுட்டுகிறார். ஒரு வகுப்பினர் அங்கமெலாம்

குறைந்தழுகும் தொழுநோயர்; மற்றவர் பசுவை உணவாகத் தின்றோர். இந்த இரு பிரிவினரும் இறைவனுக்கு அன்பரெனில், கடவுளாக வணங்குவேன் என்று சொல்லும் ஈடில்லா அன்பும் தெளிவும் வியக்கவைப்பவை அன்றோ?

மனிதம் பேணும் பணியை முன்னுரிமையாகக் கொண்ட அச்சமில்லா மனம் அப்பருடையது. திருமாலும் நான்முகனும் தேடியும் காணா இறைவனைத் தேடித் தன்னுள்ளே கண்டுகொண்டதனால்தான் அப்பர், இறைவனை எளியோரின் துணைவனாகக் காட்டினார்போலும்.

முன்னெழுந்த கேள்வியை மறுபடி சிந்தித்துப் பார்ப்போம்... அப்பர் விரித்துரைக்கும் அன்புவழியில் இறைவனைப் பற்றுவது அவ்வளவு கடினமானதா?

கடினமல்ல எளிதுதான் என்றல்லவா தோன்றுகிறது ! இறைவனை நாடி நெக்குருகிப் பணிந்திட, சாத்திரங்களும் கோத்திரங்களும் தேவையில்லையென்று ஆணித்தரமாகச் சொன்ன அப்பரின் அறவுரைகளால், அன்பொன்றையே அடிப்படைத் தகுதியாகக் கொண்ட இறைவழிபாடு எளிமையாக்கப்பட்டது.

சமயப்பற்றின் பெயரால் தம் காலத்தே பரவியிருந்த சமூகக்கட்டுகளையும் கூடா மரபுகளையும் மக்களிடையே பிரிவினை ஏற்படுத்திய நம்பிக்கைகளையும், அதே சமயப்பற்றின் அடிவேராம் இறையன்பின் பெயரால் மாற்றியமைக்க முயன்றவர் திருநாவுக்கரசர். இறைவனையும் எளிய தொண்டர்களையும் பிரித்து வைத்த பத்திமை நம்பிக்கைகளையும் கோட்பாடுகளையும் தம் உழவாரப் படையையே ஆயுதமாகக் கொண்டு களைந்தெறியப் பாடுபட்டவர் அவர். அகலாத சமூகப் பார்வையால், எளியோருக்காகப் போராடும் குரலாகவும் தம் பாடல்களை ஒலிக்கச் செய்தார் அப்பரெனும் அன்புத் தொண்டர்.

இப்போது சொல்லுங்கள்.. அன்புவழியில் இறைவனைப் பற்றுவது எளிதுதான் இல்லையா?

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.

# பண்டெழுவர் தவத்துறை

பகுதி–3

**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

(சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள தவத்துறையில் அமைந்துள்ள திருக்கோயில் அமைப்பு குறித்த கட்டுரையின் தொடர்ச்சி)

## விமானமும் மண்டபங்களும்

புறத்தே 3. 45 மீ. உயரம், 4. 90 மீ. பக்கமுடைய இறையகம், வடக்கிலும் தெற்கிலும் ஏறத்தாழ ஒரே அளவு (4. 39 மீ.) கொண்டுள்ள முகமண்டபம் ஆகிய இரண்டும் திருப்பணி மாற்றங்களுக்கு உள்ளாகாமல் காட்சிதர, அவற்றின் முன்னுள்ள பெருமண்டபம் மூன்றாம் இராஜராஜரின் ஆட்சிக்காலத்தே (பொ. கா. 1216-1224) திருப்பணிக்காளாகி அகலப்படுத்தப்பட்டுள்ளபோதும், தன் பழைய கட்டமைப்பைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது. தெற்கிலும் வடக்கிலும் வாயில்கள் பெற்ற இடைநாழிகையால் முகமண்டபத்துடன் இணைக்கப்பட்டிருந்த இப்பெருமண்டபம், பழங்கட்டமைப்பை ஒட்டி வடக்கிலும் தெற்கிலும் 3.85 மீ. அளவிற்கு அகலப்படுத்தப்பட்டுக் கிழக்கு மேற்காக 8.20 மீ. நீளத்திற்குப் புதிய சுவர்களைப் பெற்றுள்ளது. இப்புதிய சுவர்கள் மேற்கில் 1.71மீ. அளவிற்குத் திரும்பி 90செ.மீ. நீட்சிபெற்று, இருபுறத்தும் பிதுக்கமாகி, 2. 14 மீ. அகலத்திற்குத் தென்வடலாக நீண்டு, மீண்டும்



முன்னிருக்குமாறு, முச்சதுர இருகட்டுத் தூண்கள் வெட்டுத் தரங்கப் போதிகைகளால் கூரையுறுப்புகள் தாங்கும் அமைப்பைக் காணமுடிகிறது.

பெருமண்டபத்தின் பழைய வடசுவரிலிருந்து இராஜகேசரியின் நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் முதலாம் இராஜாதிராஜரின் 28ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் மண்டபத்தின் பழைய தென்சுவரிலிருந்து சோழர் காலக் கல்வெட்டுகள் பத்தும் களஆய்வின்போது கண்டறியப்பட்டுப் படியெடுக்கப்பட்டன.26 மண்டபத்தின் மேற்குச்சுவரில் தென் புறத்தே முதலாம் இராஜேந்திரரின் மெய்க்கீர்த்தியுடனான கல்வெட்டு இடம்பெற்றுள்ளது.27 வடசுவரில் பரவித் தாங்குதள உறுப்புகளில் வளரும் கல்வெட்டு விஷ்ணு திருமுன் பின் மறைந்துள்ளது. மண்டபத்தின் புதிய இணைப்பான தென்சுவரில் மூன்றாம் இராஜராஜரின் முற்றுப்பெறாத ஒன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக் கண்டறியப்பட்டது.28 2. 21 மீ. உயர, 1. 24 மீ. அகல மண்டப மேற்குவாயிலின் மேலுள்ள உத்திரத்தில்

மடிந்து பெரு மண்டபத்தின் பழைய மேற்குச்சுவருடன் ஒன்றுகின்றன. பெரு மண்டபத்தின் பழைய, புதிய சுவர்களுக்கு இடைப்பட்ட 6. 83 மீ. நீள, 2. 20 மீ. அகலம் பெற்ற வடபகுதியும் 6. 43 மீ. நீள, 2. 23 மீ. அகலத் தென்பகுதியும் முறையே 2.50 மீ., 2. 53 மீ. உயரச் செவ்வகக் கூடங்களாகியுள்ளன. இவை ஒவ்வொன்றும் குறுக்குச் சுவர் ஒன்றால் இரண்டு அறைகளாக்கப்பட்டுள்ளன.

இம்மண்டபத்தின் புதிய நீட்சிக்கேற்ப வடக்கிலும் தெற்கிலும் நீட்டப்பட்ட 11. 50 மீ. நீள, 2. 37 மீ. அகல, 2.63 மீ. உயர இடைநாழிகையின் வடவாயில் தற்போது சுவரால் அடைக்கப்பட்டுள்ளது. நாகபந்தநிலை பெற்றுள்ள தெற்குவாயில் 1.62மீ. உயரம், 79 செ.மீ. அகலத்துடன் பயன்பாட்டில் உள்ளது. மாற்றம் பெறாத பெருமண்டபத்தின் மேற்குப்பகுதிக்கு



கண்டறியப்பட்ட கல்வெட்டு, இத்திருவாயிலை அழகிய சேமன் திருவாயிலாகவும் மண்டபத்தை அழகிய சேமன் நிருத்தமண்டபமாகவும் அடையாளப்படுத்துவதுடன், அவற்றை உருவாக்கிய கங்கன் பெருமாளான இராஜராஜ மழநாடாள்வார் இறைவனுக்கு அணிகலன்கள் செய்தளித்த தகவலையும் தருகிறது.29

பெருமண்டப மேற்கு வாயிலை ஒட்டிய தென்புறத் திண்ணையில் அர்த்தபத்மாசனத்தில் அஞ்சலியில் உள்ள விஷ்வக்சேனரின் பின்கைகளில் சங்கும் சக்கரமும் அமைய, அடுத்துள்ள தனித் திருமுன்னில் முனிவர்கள் எழுவர் உள்ளனர். வடபுறத் தனித் திருமுன்களில் மகாவிஷ்ணுவும் கிருஷ்ணரும் அமைய, திருப்பச்சுவரில் புடைப்புச் சிற்பமாய் ஆதிரை விநாயகர் காட்சியளிக்கிறார்.

கருவறையை நோக்கியவாறு நந்தி அமர்ந்துள்ள பெருமண்டபம் உட்புறத்தே கிழக்கு மேற்காக 6. 33 மீ. அகலம், தென் வடலாக 7. 20 மீ. நீளம், 2. 55 மீ. உயரம் கொண்டுள்ளது. அதன் கூரையை இருசதுர, இருகட்டுத் தூண்கள் நான்கும் அதே கட்டமைப்பிலுள்ள சுவரொட்டிய அரைத்தூண்கள் நான்கும் தாங்குகின்றன. கட்டுகளில் கீழ்க்கட்டு எண்பட்டையாகவும் மேற்கட்டு பதினாறு பட்டையாகவும் கலசம், தாடி, கும்பம் பெற்றுள்ள இத்தூண்கள் தாமரை, பலகையற்ற நிலையில் வீரகண்டம் கொண்டு போதிகை தாங்குகின்றன. தரங்கம், குளவு, நடுப்பட்டை பெற்ற போதிகைக் கைகள் மண்டபத்தின் முப்புறத்தும் கூரையுறுப்புகள் தாங்க, கூரை வெறுமையாக உள்ளது. மண்டபத்தின் கிழக்கில் பிற்சோழர் காலத்தே நிகழ்ந்த திருப்பணி இணைப்பாக வடக்கிலும் தெற்கிலும் இரண்டு சுவர்த்துண்டுகள் முன்புறம் பெருந்தூண்கள் பெற்று அமைய, தூண்களின் மதலைகள் தாங்கும் உத்திரம், கிடைக்கோடும் அதன் நடுவில் செங்குத்துக்கோடும் கொண்ட அமைப்பிற்கு இடைப்பட்ட வளையப் பிதுக்கங்கள் அடுத்தடுத்தமைந்த அலங்கரிப்புப் பெற்றுள்ளது. இவ்வுத்திரத்தை மேலும் கீழுமாகத் தாமரை வரிகள் தழுவியுள்ளன. பழைய பெருமண்டபத்தின் வட, தென் திருப்பங்களைத் தழுவிய நிலையில் இந்தச் சுவர்த்துண்டுகள்






கூரையுறுப்புகள் காட்டப்பட்டுள்ளமை குடைவரைக் கால நினைவுகளின் எச்சம் எனலாம். மேற்குப் பார்வையில் சிறிய அளவிலான இலிங்கத் திருமேனி பெற்றுள்ள 2. 99 மீ. உயரக் கருவறை உட்புறத்தே 2. 35 மீ. பக்கமுடைய சதுரமாக உள்ளது. இறையக வாயிலின் தென்புறத்தே உமையின் செப்புத்திருமேனி போக சக்தியம்மனாக இடம்பெற்றுள்ளது.

நன்கு இணைக்கப்பட்டுள்ளன.

பத்மபந்தத் தாங்குதளம் பெற்ற முகமண்டபம் உட்புறத்தே கிழக்கு மேற்காக 4. 28 மீ. நீளம், தென்வடலாக 2. 53 மீ. அகலம் 2. 67 மீ. உயரம் பெற்றுள்ளது. அதன் வாயிலைச் சட்டத்தலை கொண்ட எண்முக அரைத்தூண்கள் அணைத்துள்ளன. வாயிலின் இருபுறத்தும் பக்கத்திற்கொருவராகச் சோழர் காலக் காவலர்கள். முகமண்டபக் கூரையைத் தாங்கும் நான்கு தூண்களும் சதுரபாதம், எண்முக உடல், தொங்கல், தாமரைக்கட்டு, கலசம், தாடி, கும்பம், பாலி, பலகையுடன் வீரகண்டம் பெற்று, குளவும் பட்டையும் பெற்ற தரங்கப் போதிகைகளால் கூரையுறுப்புகள் தாங்க, கூரை தென்வடலாக முப்பிரிவுகளாய்ப் பகுக்கப்பட்டுள்ளது. சுவர்களின் மேலும் நாற்புறத்தும்

## விமானம்

ஒருதளக் கலப்பு வேசரமாய்ச் சாலைப்பத்திப் பிதுக்கத்துடன் உள்ள இறைவன் விமானம், உபானம், தாமரை ஜகதி, சிறு தாமரைவரிகளால் தழுவப்பட்ட உருள்குமுதம், பிரதிவரி கொண்ட பத்மபந்தத் தாங்குதளத்துடன் உருவாகியுள்ளது. இதன் வடபுற உபானத்தில் சாலைப்பத்தியின் நடுவிருக்குமாறு யாளித்தலைப்புடனான முழுக்காட்டு நீர்வழி காட்டப்பட்டுள்ளது. பல்லவ, முற்சோழர் கலைமுறையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட அமைப்பில் வடிக்கப்பட்டுள்ள இதன் பிரதிவரியில் ஓங்கிய வாளும் ஏந்திய கேடயமும் கொண்ட யாளிவீரர்களின் எழுச்சிமிகு அணிவகுப்பைப் பார்க்கமுடிகிறது.30

பொதுவாகப்பிரதிவரியில், யாளிகளின் முன்னுடலும் முன்னங்கால்களும் மட்டுமே காட்டப்பட்டிருக்கும். ஆனால், இங்கு முழு உடலும் தெரிய யாளிகளின் ஊர்வலம். சில யாளிகள் முன்னோக்கியும் சில யாளிகள் எதிர்த்திசை நோக்கியும் நடக்கும் இந்த அழகு பொலியும் காட்சியில் ஆங்காங்கே வேழயாளிகளும் யானைகளும் சிம்மங்களும்கூட உடன்கூட்டமாகியுள்ளன. கருவறைச் சுவரின் வடகோடியில் உள்ள யானையைச் சிம்மம் தாக்கும் காட்சி குறிப்பிடத்தக்கதாகும்.

இ வ் அ ணி வ கு ப் பி ன் திருப்பங்களை வீரர்கள் அமர்ந்த மகரவாய்கள் அணிசெய்கின்றன. அவற்றின் அகலத்திறந்த வாய்களிலிருந்து கத்தியும் கேடயமுமாய்ப் போர்வீரர்களின் வெளிப்பாடு. தென்புற மகரவாயொன்றில் இசைக்கலைஞரின் தாளத்திற்காடும் ஆடலரைக் காணமுடிகிறது. பெரும்பாலான மகரதலைகளின் அருகே யானையோ, யாளியோ காட்டப்பட்டுள்ளது. இத்தகு யாளிப்படையைத் தமிழ்நாட்டின் வேறெந்தப் பழங்கோயில் பிரதிவரியும் கொள்ளவில்லை.31 விமானத்திற்கு இந்தப் புத்தமைப்பு தனிக் கவர்ச்சியையும் உயிர்ப்பையும் தருவதுடன், இயக்க உணர்வையும் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.



பிரதிவரியின் மேலுள்ள வேதிகைத்தொகுதியின் 16. 5 17 செ. மீ. அகலம், 1314 செ. மீ. உயரம் கொண்ட பாதங்களில், காலத்தின் கரைப்பையும் மீறிய உளிவீச்சுக்கள் புராண, இதிகாசக் காட்சிகளைக் கண்முன் நிறுத்துகின்றன. வேதிகைத்தொகுதிக்கு வரம்பிட்டு ஓடும் மேற்கம்பிலிருந்து சதுரபாதங்களுடன் எழும் எண்முக அரைத்தூண்கள் தொங்கல் தொடங்கிப் பாலி, பலகை உள்ளிட்ட அனைத்து உறுப்புகளும் பெற்றுச் சுவர் தழுவ, முப்புறத்தும் சாலைப்பத்திகளில் உள்ள கோட்டங்கள் வடக்கில் பிச்சைத்தேவரையும் கிழக்கில் அம்மையப்பரையும் தெற்கில் வீணையேந்திய பெம்மானையும் நெடிய நின்றகோலத் திருமேனிகளாய்ப் பெற்றுள்ளன. தூண்களின் தொங்கல்களிலும் பாலி, பலகைகளின் கீழ்ப்புறத்தும் அழகிய பூவேலைப்பாடுகள்.

கோட்டத் தலைப்பாகும் மகரதோரணங்களில் வடக்கில் மட்டும் விராடன் இராமரை அழிக்க வரும் சிற்பம் உள்ளது.









தூண்களின் மேலுள்ள போதிகைகள் தரங்கம், குளவு, பட்டை பெற்றுக் கூரையுறுப்புகள் ஏந்துகின்றன. உயிர்ப்புடன் விளங்கும் வலபியின் பூதவரியில் குடக்கூத்து உள்ளிட்ட பல அரிய மானுடச் செயற்பாடுகள் பதிவாகியுள்ளன. கபோதத்தில் வள்ளி மண்டலம், சந்திரமண்டலம், ஆழமான கூடுவளைவுகள் அமைய, மேலே பூமிதேசம்.

கூரையின் நான்கு மூலைகளிலும் நந்திகள் அமர, கிரீவ கோட்டங்களில் தெற்கில் ஆலமர்அண்ணலும் மேற்கில் விஷ்ணுவும் வடக்கில் நான்முகனும் கிழக்கில் உமை தழுவிய சிவனும் அமர்ந்துள்ளனர். கோட்டங்களுக்கு இடைப்பட்ட கிரீவசுவரில் வடமேற்கில் விஷ்ணுவும் இலட்சுமியும் காட்சிதர, வடகிழக்கில் அஞ்சலியில் நான்கு முனிவர்களும் தென்கிழக்கில் காளி, பிள்ளையாருடன் அஞ்சலியில் மூன்று முனிவர்களும் காட்டப்பட்டுள்ளனர். தென்மேற்கில் அம்மையப்பரும் அரிஅரனும் உள்ளனர். கிரீவசுவரின் மேலே உத்திரமும் பூதவலபியும் அமைய, சிகரம் தாமரைத்தளத்தில் குடம் பெற்றுள்ளது.

(தொடரும்)

# கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
# கோவிலூர் புதையல்கள் - 16

# ஸ்ரீ சிதம்பர ஞானதேசிகர்
## நெஞ்சுவிடு தூது - நூல் அறிமுகம்

- நூல் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

ஸ்ரீ சிதம்பர ஞானதேசிகர் நெஞ்சுவிடு தூது அ ள வி ல் சிறிய கையடக்க நூல். 27 பக்கங்களை மட்டுமே கொண்டது. மூன்றாம் பட்டம் சீர் வளர் சீர் சிதம்பர ஞான தேசிகர் என்ற கருணாநிதி சுவாமிகளின் மீது அவரது மாணாக்கரில் ஒருவரான சட்டையப்ப சுவாமிகளால் பாடப்பட்டுள்ளது. 1910இல் கோவிலூர் மடத்தின் நான்காம் பட்டம் சீர் வளர் சீர் இராமசாமி ஞானதேசிகரின் மாணாக்கரான ஸ்ரீ முத்துக் கருப்பு சுவாமிகளால், சென்னை, சோமேசுவரன் பேட்டை, சச்சிதானந்த அச்சகத்தில் பதிக்கப்பட்டுள்ளது, வெளி யிடப்பட்டுள்ளது.

### தூது இலக்கியம்

சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று தூது இலக்கியம். ஒருவர் மற்றொருவரிடமிருந்து மக்களையோ, அல்லது அஃறிணைப் பொருள்களையோ தூது அனுப்புவதாக அமைந்த இலக்கிய வகை தூது என்றழைக்கப்படுகின்றன.

தூது இலக்கியங்கள், காதல் துயரம் காரணமாக ஓர் ஆண்

அல்லது பெண் தான் காதல் கொண்ட பெண் அல்லது ஆணுக்குத் தூது அனுப்புவதாக அமைகிறது.

ஒரு அஃறிணைப் பொருளைத் தூது சென்று வருமாறு வேண்டிஉரியவரிடம் சென்று மாலை வாங்கி வருமாறு வேண்டுவதுஎன்ற வகையிலும் தூதுப் பாடல்கள் அமைகின்றன.

இந்நூலில் சட்டையப்ப சுவாமிகள் தன் நெஞ்சினை தன் குருவான சிதம்பர ஞானதேசிகரிடம் தூதாக அனுப்பி, அவரிடம் மாலை வாங்கி வருமாறு வேண்டுகிறார்.

## நூலின் அமைப்பு

சங்க பூஜ்ய பகவத்பாத சுவாமிகளால் இயற்றப்பட்ட பிரம்ம நாமாவளி என்னும் பாடல்களின் தொகுப்பு, நூலின் தொடக்கமாக அமைகிறது. இப்பாடல்கள் ஐந்தாம் பட்டம் சீர் வளர் சீர் வீரப்ப ஞானதேசிகரின் மாணாக்கர் சென்னை வீர. சுப்பையாசுவாமிகளால் மொழி பெயர்க்கப்பட்டவை. சுப்பையா சுவாமிகள் நான்கு மொழிகள் அறிந்தவர். அவர் வடமொழியில் இருந்து இதனை மொழிபெயர்த்துள்ளார். மொத்தம் இருபத்தியிரண்டு பாடல்கள் இதில் அமைந்துள்ளன. பிரம்ம தேவனின் பல பெயர்களை வரிசைப்படுத்தி அவரைப் போற்றும் வ ண் ண மா க இ ப் பா ட ல் க ள் அமைக்கப்பெற்றுள்ளன.

## காப்புப் பாடல்

நெஞ்சுவிடு தூதின் காப்புப் பாடலாக விநாயகர் பாடல் அமைந்துள்ளது. எளிய சொற்களால் வெண்பாவாக இப்பாடல் அமைந்துள்ளது.

“ பூமாது நாமாது போற்று மிருவர்புகழ்
கோமான் சிதம்பரநா மக்குரிசில் – சீமான்மேல்
நெஞ்சுவிடு தூதுநிகழ்த்தச் சமிவனம்வாழ்
கஞ்சக் கரிமுகன்தாள் காப்பு”

திருமகள் கலைமகள் என்று இருவரும் போற்றுகின்ற மன்னனைப் போன்ற சிதம்பரம் என்ற திருநாமத்தைப் பெற்ற பெருமைக்குரியவர். அச்செல்வன் மேல் நெஞ்சுவிடு தூது நிகழ்த்தப் போகிறேன். இதற்குச் சமிவனம் என்றழைக்கப்படும் கோவிலூர் வாழும் யானை முகனே காப்பு என்று பாடுகிறார்.

## தூதின் சிறப்பு

தூதின் மரபுப்படி கண்ணிகளாக இந்நூலின் பாடல்களை சட்டையப்ப சுவாமிகள் எழுதியுள்ளார். இந்நூல்

முன்னூற்று எண்பத்து மூன்று கண்ணிகளைக் கொண்டுள்ளது. இரண்டு அடிகளால், எதுகை மோனை கொண்டு எழுதப்படுவது கண்ணி எனப்படுகிறது. அவ்வகையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. முதலில் கோவிலூர் கொற்றவாளீசுவரைப் புகழ்கிறார். தொடர்ந்து குருவின் புகழ் எடுத்துரைக்கப்படுகிறது.

குருவின் புகழ்

தனது குருவான சிதம்பர ஞான தேசிகரை தாழ்ந்து பணிந்து, அவரது புகழைப் பதிவு செய்திருக்கிறார். அவற்றில் சில,

" அஞ்ஞான இருளைப் போக்கும் அருட்சோதி"

" மங்கையெனும் மாநரகின் வாசல் கதவு அடைக்கும்
துங்கமுறு பற்றின் றுணி துறவு"

"மட்டிலா ஞான மணிவிளக்கு"

"அந்தமிலாத் தனிக் கரும்பு"

"நல்லோர்க்கு எளிய நவமணி நன்கில்லாத
பொல்லாக்கு அரிதாய பொற்புதையல்"

இவை குருவின் புகழ் பாடும் சில சான்றுகள் ஆகும். நூல் முழுதும் சிதம்பர ஞானதேசிகரின் புகழ் பாடுவது சிறப்பு.

## நெஞ்சைத் தூதாக அனுப்புதல்

துறவின் சிறப்பையும், அதற்கு இடையூறாக இருப்பனவற்றையும் வரிசைப்படுத்தி அவற்றை அப்புறப்படுத்தும் ஆற்றல் சிதம்பர ஞானதேசிகருக்கு இருப்பதை இத்தூதில் விளக்குகிறார்.

## நெஞ்சிடம் வேண்டுதல்

" .................நெஞ்சேஓர்
வார்த்தைசொலக் கேளாய் என் மாதவமே சீர்த்திமிகு
அன்பேஎன்அன்பே என் அன்பே நினைஅன்றி
இன்புடனே தூதுக்கு இசைவோர்கண் – மன்புவியி
லானதா நீயே அருள்சிதம்பரேசன்பால்
ஏறனைய நீதூது செல்லவே – யான்நினைந்து
கூறினேன் ..........."

என்று நெஞ்சினைத் தூதாகச் செல்ல வேண்டுகிறார் ஆசிரியர்.

நெஞ்சே! நீ சிதம்பரேசன் பால் ககழனிவாசலுக்குச் செல்லும் போது பல இடையூறுகள் ஏற்படும் . ஆனால் அஞ்சாதே! என்று நெஞ் சுக்குப் பல அறிவுரைகள் சொல்லி அனுப்புகிறார்.

" பஞ்ச விடய் படுகுழியில் வீழாதே




துஞ்சு பொறிவழியில் சுற்றாதே
நாகமென்னும் பெண் அரவை நண்ணி வருந்தாதே
சோகமெனும் முள்ளால் துவளாதே”

என்பன இடையூறுகளைச் சுட்டி அதனின்று விலகிக் குருவைப் பணிந்துவர நெஞ்சிடம் கூறுகிறார் ஆசிரியர். நிறைவில் நெஞ்சே! நீ சிதம்பரேசன் பால் செங்கழுநீர் மாலை பெற்று வா என அழகுற வேண்டுகிறார்.

“ புகல்சிதம்பரேசன்பால் போந்தே – விகலமிலா
உள்ளமே தூதுசென்றே எந்தன்புயத்தின் செய்கழுநீர்க்
கள்ளவிழு மாலைகொண்டு கா”

என்று பாடுகிறார்.

நூல் சிறிதாக இருந்தாலும், இதனுள் கொற்வாளிசுவரர் சிறப்பு, கோவிலூர் ஆண்டவர் சிறப்பு, சிதம்பர ஞானதேசிகரின் சிறப்பு,துறவின் சிறப்பு ஆகியன சிறப்புடன் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

இந்நூலை வாசிக்க பின் வரும் இணைப்பைச் சொடுக்கவும்



# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம் -19



- வாகீச கலாநிதி
கி.வா. ஜகந்நாதன்

## அருமையும் எளிமையும்

செல்வம் முதலியவற்றால் உண்டாகும் அகங்காரத்தை வரவிடாமல் ஒடுக்குவது பக்தர்கள் இயல்பு. எங்கே அகங்காரம் தலை காட்டுகிறதோ அங்கே ஆண்டவனைக் காண முடியாது. இறைவன் செல்வத்தாலும் கல்வி யினாலும் அளப்பதற்கு அரியவன்; அன்பு செய்வாருக்கு அருட்கண் அளித்துத் தன் உண்மையை உணரச் செய்வான்.

“அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்

இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்

இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே”

என்பது அப்பர் வாக்கு.

“அருளால் எவையும்பார் என்றான், அதை

அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்;

இருளான பொருள்கண்ட தல்லால் கண்ட

என்னையும் கண்டிலன் என்னேடி தோழி“

என்பார் தாயுமானவர். அவனருள் கிடைத்தால், இதுவரைக்கும் நாம் பார்த்த பார்வை மருட்பார்வை என்று தெரியவரும். அந்த அருளைப்



பெறுவதற்கு வழி யாது? அவனிடம் இடைவிடாது முறுகிய அன்பை வளர்த்தல். அந்த அன்பே அவன் அருளைப் பெறச் செய்யும். அந்த அருளே கண்ணாக நின்று உண்மையை உணர்த்தும்.

அருளினால் உண்மையை உணரவேண்டும் என்ற கருத்தின்றிச் செல்வச் செருக்கும் கல்விச் செருக்கும் மீதூர்ந்து நிற்க, அன்று, பல பல காலத்துக்கு முன்பே, மாலும், நான்முகனும் சிவபெருமான் அடிமுடியைத் தேடினார்கள். அடியும் முடியும் அகப்பட்டால் பொருளின் நீளமோ உயரமோ தெரிந்து விடும் அல்லவா? அவர்களுக்கு அடியும் முடியும் தெரியவில்லை. அதனால் சிவபெருமானுடைய அளவு தெரியவில்லை. அவன் அளப்பரியனாக நின்றான்.

**மாலுக்கும் நான்முகற்கும் அன்றும் அளப்பரியன் ஆனானை**

என்று இதைக் காரைக்காலம்மையார் சொல்கிறார். அன்றும், அளப்பரியன் என்பதில் உள்ள உம்மை, இன்றும் அவன் அப்படியேதான் இருக்கிறான். செல்வத்தாலும் கல்வியாலும் அதனை அறிந்து கொள்ள முடியாது” என்ற பொருளைத் தந்தது.

அவனை அன்பினால் சாராதவர்களுக்கு அவனை அறியவே முடியாது. எப்படியாவது அவன் காலில் விழும் வாய்ப்புக்

கிடைத்தவர்களுக்கு மிக மிக உயர்ந்த நிலை கிடைக்கும். சந்திரன் தக்க யாகத்துக்குப் போனான். மற்றத் தேவர்களும் போனார்கள். அவைதிகமான யாகத்தைச் செய்தான் தக்கன். அகந்தையின் விளைவாக, இறைவனை மறந்து அந்த யாகத்தைச் செய்தான். அவன் சிவபெருமானுடைய மாமனார். யாராக இருந்தால் என்ன? தவறு செய்தவர் தண்டனைக்கு உள்ளாக வேண்டியதுதான். அவன் செய்த அந்த முறையற்ற செயலுக்கு உடந்தையாகத் தேவர்கள் இருந்தார்கள். அவர்களும் குற்றத்துக்கு ஏற்ற தண்டனையை அடைய வேண்டியவர்களே. இறைவன் அவர்களுக்கு உரிய தண்டனையை அளித்தான்.

சந்திரனுக்கும் தண்டனை கிடைத்தது. அவனை இறைவன் காலாலே தேய்த்தான். சந்திரன் அந்தக் காலைப் பற்றிக் கொண்டான். அதன் பயனாக இறைவன் தன் தலையிலே அவனை வைத்துக் கொண்டான்; அவனை சிரஞ்சீவியாக்கி விட்டான். வானத்திலுள்ள மதி தேயும், வளரும். இறைவன் திருமுடியில் உள்ள சந்திரன் தேய்வதில்லை; வளர்வதில்லை. இறைவன் திருவடித் தொடர்பால் இத்தகைய உயர்ந்த நிலை அவனுக்குக் கிடைத்தது. அவன் இறைவனுடைய காலையும் கண்டான்; முடியையும் கண்டான். மாலுக்கும் நான்முகனுக்கும் அளப்பரிவனாகிய இறைவன் சந்திரனுக்கு அளப்பதற்கு எளியனாகி விட்டான். காலைப் பிடித்துக் கொண்டதனால் ஆகிய பலன் இது.

## என்றும்ஓர் மூவா மதியானை

இறைவனைத் தெரிந்து கொள்ள எங்கெங்கோ போய்த் தேட வேண்டும் என்பது இல்லை. அன்பினால் நெக்குருகினால் எந்த இடத்திலும் அவனைக் காணலாம். அவன் எல்லா உலகங்களுமாக இருக்கிறான். இருபத்தோர் உலகங்கள் என்று ஒரு கணக்குச் சொல்வதுண்டு. மேலேழு, கீழேழு உலகம் ஏழு பிரிவாக உள்ளது; ஆக இருபத்தொன்று. 'எல்லா உலகமும் ஆனாய் நீயே" என்று



அப்பர் பாடுவார்.

மூவே முலகங்கள் ஆவானை.

அப்படி உள்ள பெருமானைக் காண வேண்டும்; காண்பது என்பது இரு வகைப்படும். முகக் கண்ணினால் பார்ப்பது ஒன்று: அகக் கண்ணினால் பார்ப்பது ஒன்று. அகக் கண்ணினால் பார்ப்பது என்பது எதையோ காட்சியாகக் காண்பது அன்று; அநுபவமாக அறிவதே அது. இறைவனிடம் அன்பு செய்து, அகந்தையைப் போக்கி, அவன் அடியே பற்றாகக் கொண்டு நின்றால் நம் அகக் கண் திறக்கும். அப்போது இறைவனைக் காணும் அநுபவம் கிடைக்கும். அந்த அநுபவமே உண்முகக் காட்சி; அதுவே ஆனந்தம்.

“முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்

அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்”

என்பது திருமந்திரம். அந்த அநுபவத்தை அறிவென்றும் காட்சி என்றும் சொல்வதுண்டு.

மாலுக்கும் நான்முகனுக்கும் அளப்பரியனாகிய இறைவன் காலைப் பற்றிக் கொண்ட சந்திரனுக்கு உயர்ந்த நிலையை அளித்தான். இவை பழைய கதைகள். இறைவன் தன்பால் அன்பு செய்வோருக்கு உண்மை நிலையை அருளுவான் என்பது அந்தக் கதைகளில் தோன்றும் உண்மை. அது இன்றைக்கும் பொருந்தும்.

இதைத் தம்முடைய அநுபவத்தால் உணர்ந்தவர் காரைக்கால் அம்மையார்.

தேடிக் கொண்டு

கொண்டேன்திரு மாலொடு நான்முகனும்

தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக் கண்டுகொண்டேன்’

என்று அப்பர் ஆனந்தக் கூத்திடுகிறார், பலர் தேடிய ஒரு பொருள், பல காலமாகத் தேடியும் காண முடியாத பொருள் ஒருவருக்குக் கிடைத்துவிட்டால் அவருக்கு உண்டாகும் ஆனந்தத்தை அளவிட முடியுமா?

அதே நிலையில் உள்ள காரைக்காலம்மையார் சொல்கிறார். அந்தப் பழைய கதை, செருக்குற்ற மாலுக்கும் நான்முகனுக்கும் காணுவதற்கு அரியான் என்று இறைவனைச் சொல்லுகிறது. அன்றும் இன்றும் அளப்பரியவனாக நிற்கிறான் எம்பெருமான். ஆனால் காலைப் பற்றிய சந்திரனுக்கு அருள் செய்தான். இன்று, அவனை உள்ளே காணும் அறிவு, அநுபவிக்கும் அனுபவம் மிகவும் எனக்கு எளிதாகிவிட்டது என்றார். இந்த ஆனந்த அனுபவத்தில் உண்டான பெருமிதத்தால், “இன்று நமக்கு எளிதே’ என்று பன்மையினால் சொல்லிக் கொள்கிறார். அவனைக் காணும் அறிவு இன்று நமக்கு எளிதே’ என்று தெள்ளத் தெளிவாகச் சொல்கிறார்.

இன்று நமக்குளளிதே; மாலுக்கும் நான்முகற்கும்

அன்றும் அளப்பரியன் ஆனானை, என்றும்ஓர்

மூவா மதியானை மூவே முலகங்கள்

ஆவானைக் காணும் அறிவு.

செருக்கினால் இறைவனை அறிய முடியாது என்பதும், அன்பினால் அவன் அருளைப் பெற்று ஆனந்தம் உறலாம் என்பதும் இந்தச் செய்யுளின் கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 19ஆவது பாடல்.

(தொடரும்)

# கோபத்தால் அறிவிழந்த இந்திரமயில்



**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

முருகப்பெருமானுக்கு மயில் வாகனம். சேவல் கொடி. வேல் ஆயுதம். முருகப் பெருமானுக்கு ஒரு மயில் மட்டும் வாகனமாக அமையவில்லை. நான்கு திசைக்கும் நான்கு மயில்கள் வாகனமாக அமைந்துள்ளன. முருகன் அழகின் வடிவம். அவன் விளையாட எடுத்துக்கொண்ட மயில் ஒன்று. இது சூரியனால் தரப்பெற்றது. இரண்டாவதாக முருகன் ஞானப்பழம் பெறுவதற்காக ஏறிச்சென்ற மயில் மந்திர மயில்.சூரனை அழிப்பதற்காக ஏறிய மயில் இந்திரமயில். சூரபதுமனைப் பிளந்தபோது அவன் மயிலாகவும் சேவல் கொடியாகவும் முருகனிடம் அடைக்கலமானான். அந்த மயில் அசுரமயில் ஆகும். தேவமயில், இந்திர மயில் என்றும் அழைக்கப்படுகிறது.

ஒரு முறை இந்த மயில் தனது அறியாமையால் அறிவிழந்து கோபப்பட்டது. எந்த விஷயத்திலும் உண்மையை ஆராய்ந்து தெளிவதே அறிவு. கேட்பார் பேச்சைக் கேட்டு அறிவிழப்பது எவ்வளவு தவறு என்பதை அது உணரவில்லை. இதனால் முருகப் பெருமானின் சாபம் பெற்று அது மலையானது. அது என்ன கதை என்று பார்ப்போம்.

வைகாசி விசாகத்தில் முருகன் அவதரித்தவுடன் சூரிய பகவானும் அக்னியும் தங்கள் திருமேனியிலிருந்து மயிலையும் சேவல் கொடியையும் உருவாக்கி அளித்தார்கள். அன்றுமுதல் முருகப் பெருமானின் வாகனமாக ஆனது அது.

அடுத்து வேதங்களும் முருகன் விளையாட மயிலானதால் அது அருணகிரிநாதரின் திருப்புகழில் மந்திர மயில் என்று அழைக்கப்பட்டது. இந்த மயிலில் ஏறித்தான் அவர் அம்மையப்பனிடம் மாங்கனியைப் பெற உலகைச் சுற்றி வந்தார்.

முருகப் பெருமான் சூரபத்மனுடன் போரிட்டபோது தேவேந்திரன் மயிலாக மாற அம்ம யிலின் மீது ஆரோகணித்துத்தான் போரிட்டார். இதுதான் இந்திர மயில்



எனப்படும் தேவமயில். சூரசம்ஹாரம் முடிந்தவுடன் சூரனே மயிலாகவும் கோழிக்கொடியாகவும் ஆனான். இது அசுர மயில்.

ஒருமுறை சூரனாதியர் நால்வரும் தவம் செய்துகொண்டிருந்தபோது தேவர்கள் அவர்களுக்கு ஊறு விளைவித்து அவர்களின் தவம் நிறைவேறாமல் செய்தனர். அதனால் கோபத்துடன் திகழ்ந்த சூரனாதியர் நால்வரும் தேவர்களைப் பழிவாங்க எண்ணம் கொண்டனர்.

ஒருமுறை கைலாயத்திற்கு சிவபெருமானையும் முருகப் பெருமானையும் சந்திக்க நான்முகனும் திருமாலும் வந்தார்கள். அப்போது அங்கே உலவிக்கொண்டிருந்தது இந்திரமயில். அம்மயிலிடம் சென்று ''நான்முகனின் ஊர்தியான அன்னமும், திருமாலின் ஊர்தியான கருடனும் வேகமாகப் பறந்து செல்வதில் உன்னைக் காட்டிலும் சிறந்தவர்கள். உனக்கு அந்த அளவு திறமை இல்லை'' என்று தேவர்கள் சொன்னதாக மயிலிடத்தில் சூரனாதியர்கள் பொய் சொன்னார்கள்.

'தன் திறமையைத் தேவர்கள் எப்படிக் குறைவாக மதிப்பிடலாம்' என்று திரும்பத் திரும்ப எண்ணிக் கோபம் கொண்ட மயில் அப்படி மதிப்பிட வைத்த அன்னத்தையும் கருடனையும் என்ன செய்யலாம் என்று எண்ணத் தொடங்கியது. அவ்விரண்டின்மீது அடங்காத கோபத்துடன் மயில் அலையும்போது அப்பக்கம் வந்த அன்னத்தையும் கருடனையும் கோபம் அதிகமாக வேகமாகச் சென்று அவற்றைப் பிடித்து விழுங்கி விட்டது.

சிவபெருமானையும் முருகப்பெருமானையும் சந்தித்துவிட்டு வந்த திருமாலும் நான்முகனும் தங்கள் வாகனங்களைக் காணாமல் திகைத்தார்கள், தேடினார்கள். கோபமாக அலைந்து கொண்டிருந்த மயிலையும் பார்த்தார்கள். இதெல்லாம் மயிலின் செயலாகத்தான் இருக்கவேண்டும் என்பதை உணர்ந்த அவர்கள்



முருகப் பெருமானிடம் சென்று முறை யிட்டனர்.

”நாங்கள் வரும்போது மயில் சாந்தமாகத் திரிந்து கொண்டிருந்தது. இப்போது கோபமாக அலைந்து கொண்டிருக்கின்றது. மயில் ஏதேனும் செய்திருக்குமோ என்னவோ என்று அதன் மீதுதான் சந்தேகமாய் இருக்கிறது” என்று அவர்கள் முறை யிட்டதைக் கேட்ட முருகன் மயிலை அழைத்து விசாரணை செய்தார்.

”சூரனாதியர் என்னுடைய வேகம் பத்தாது என்றும் கருடனும் அன்னமும்தான் வேகமாகப் பறப்பதில் சிறந்தவர்கள் என்றும் கூறியதால் கோபம் ஏற்பட அன்னத்தையும் கருடனையும் ஒரே விழுங்காக விழுங்கி விட்டேன்” என்றும் மயில் ஒப்புக் கொள்ள அதன் அடாத செய்கையால் கோபம் கொண்ட முருகன் அந்த அன்னத்தையும் கருடனையும் கக்கும்படி ஆணை யிட்டார்.

மயிலும் உடனே இரண்டையும் கக்கியது. நான்முகனும், திருமாலும் முருகனுக்கு நன்றி கூறி உடனே அன்னத்தின் மீதும், கருடன் மீதும் ஏறித் தங்கள் பிரம்மலோகத்துக்கும் வைகுண்டத்துக்கும் பறந்து சென்றார்கள். தன்னைச் சந்திக்க வந்த அவர்களுக்கு இடையூறு செய்ததன் காரணமாக மயிலை மலையாகும்படி முருகன் சபித்துவிட்டார்.

முருகனின் கோபத்தைக் கண்டு



பதறிய மயில் மனம் வருந்தி அவரிடம் தன்னை மன்னிக்கும்படி வேண்டி சாபவிமோசனம் கேட்டது. மயிலின் நிலை கண்டு இரங்கிய முருகன் குன்றக்குடி என்னும் தலத்தில் போய் மலையாக இருக்கும்படியும் அங்கு தான் வந்து சாபவிமோசனம் வழங்கி அருள் செய்வதாகவும் கூறினார். பொய் சொன்ன சூரனாதியரை அசுரர்களாகும்படி சபித்தார். தான் கூறியபடி முருகப்பெருமான்



அமைந்து உயர்ந்து நிற்கும் மலையைக் காணலாம். இதுதான் மயில் மலையான கதை.

மலையின் மேல் கிழக்கு நோக்கி தெய்வயானை, வள்ளி ஆகிய இருவருடன் சண்முகநாதர் மயிலின் மேல் காட்சி தருகிறார். நாம் மலை மீது ஏறும்பொழுது

குன்றக்குடிக்கு வந்து மயிலின் சாபத்தை நீக்கி மயிலை இருபாகமாக்கி ஒரு பாகத்திற்கு சாரூப பதவி அளித்தார். மற்றொரு பாகம் மலையாக இருக்குமாறு அருள் புரிந்தார். சாபவிமோசனம் பெற்ற மயில் முருகனை வணங்கித் தன் தவறுக்கு மன்னிப்பு கேட்டது. முருகனிடம் குன்றக்குடி மலையில் அதாவது தன் மேல் முருகன் எழுந்தருள் செய்ய வேண்டும் என வேண்டிக் கேட்டுக் கொண்டது.

அன்று முதல், ஆறுமுகப்பெருமானும் மயில் வடிவத்தில் அமைந்த மலையில் எழுந்தருளி அருள் புரிகிறார். குன்றக்குடி மலையைப் பார்த்தால் அம்மலை மயில் வடிவமாகக் காட்சி தருவதைக் காணலாம். ஊரின் நடுவே வடக்குப் பக்கம் முகமும் தெற்குப் பக்கம் தோகையும் கொண்டு மயிலின் உருவமாக காணப்படும் படிகள் அனைத்துமே மயிலின் தோகை போன்று அழகாக விரிந்து இருப்பதையும் காணலாம். இந்த மயூரா நகரம், அரசவனம், கண்ணபுரம், மயில் மலை, சிகண்டிமலை, தோகைகுன்றம், குன்றைநகர், மாலீச்சுரம் என்று பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது.

கோபத்தால் அறிவிழந்தாலும் அந்த இந்திரமயில் தன் தவறுணர்ந்து மன்னிப்புக் கேட்டதால் முருகப் பெருமானை என்றென்றும் சுமக்கும் பெருமைமிகு மலையாக மாறியது. மயில் இப்படி அழகான நிலையான மலையான கதையைக் கேட்டுவிட்டுக் குன்றக்குடிக்குச் சென்று வணங்கி வாருங்கள். முருகனின் அருள் மயிலோடு என்றென்றும் துணை வரும்.

## சிவாலயங்களின் சிறப்புகள் - 13



சிவனேச செல்வர்களுக்குப் பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

**வே.இராமசாமி,**B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

# நவகைலாயம் பகுதி- 2

*தமிழகத்தில் தாமிரபரணி கரையில் அமைந்துள்ள நவகைலாயம் என்று அழைக்கப்படும்ஒன்பது சிவாலயங்கள் குறித்த கட்டுரையின் தொடர்ச்சி*

### 2. சந்திரன். சேரன்மாதேவி கைலாசநாதர் கோவில், சேரன்மாதேவி

அம்சம்: சந்திரன், நட்சத்திரம்: ரோகினி, ஹஸ்தம், திருவோணம்

மூலவர்: ஸ்ரீஅம்மைநாதர்

அம்பாள்: ஸ்ரீஆவுடைநாயகி

திருக்கோவில் விருட்சம்: ஆல மரம்,

தீர்த்தம்: தாமிரபரணி வியாச தீர்த்த கட்டம்.

திருநெல்வேலியில் இருந்து சுமார் 20 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது

மூலவர் சுயம்பு மூர்த்தி.

முன்னொரு சமயம் இத் தல மூலவருக்கான கருவறையைக் கட்டிட வேண்டி, நெற் குத்தும் தொழில் கொண்ட இரு பெண்கள் காசு சேர்த்து வந்தனர். நீண்ட காலம் ஆகியும் , போதிய பணம் கிடைக்கவில்லையே என எண்ண, சிவ பெருமான் அந்தணர் உருவில் வந்து அவர்களது வீட்டில் உணவருந்தி சென்றார். வீட்டில் செல்வம் பெருகியது. பின்னரே கருவறை கட்டி முடிக்கப்பட்டது. இதை கூறும் வண்ணம் நெற் குத்தும் இரு பெண்டிரின் உருவம் தூணில் பொறிக்கப்பட்டுள்ளது. கோயிலின் அருகில் யாக தீர்த்தம் ஒன்று உள்ளது.

- இக்கோயிலில் உள்ள சிவபெருமான் “கைலாயத்து ஆழ்வார்”, “கைலாய முடையார்” என்றும் அழைக்கப்படுகிறார்.



உள்ள "திங்களூர் சிவன் கோயிலில்" இறைவனை வழிபடுவதற்குச் சமம் என்பது நம்பிக்கை.

இறைவனின் சிலைக்கு மேலே உள்ள விமானம் (கருவறையின் மேல் உள்ள அலங்கார உச்சவரம்பு) தாமரை மொட்டு வடிவத்திலும், அம்மனின் சிலையின் மேல் மூன்று பானைகளின் வடிவத்திலும் உள்ளது.

இங்குள்ள ஆவுடையம்மைக்கு மாதுளம் பழச்சாறால் அபிஷேகம் செய்தால் திருமணத்தடை விலகும் என்பது ஐதீகம்.

தெற்கு திசை நோக்கிய தனி சந்நி தியில் ஒரே கல்லால் வடிவமைக்கப்பட்ட நடராஜர், சிவகாமி அம்மை, காரைக்கால் அம்மை ஆகியோர் காட்சிதருகிறார்கள்

இங்கு சுவாமிக்கு தனி விமானத்துடனும், அம்மைக்குத் தனி விமானத்துடனும் சன்னதிகள் அமையப்பெற்றுள்ளன. இது தவிர உள்ளே நந்தி, பலி பீடம், கொடி மரம் போன்றவையும் வரிசையாக உள்ளது. மேலும் பரிவார மூர்த்திகளாக விநாயகர், சுப்பிரமணியர், அதிகார நந்தி, சூரியன், சந்திரன், தக்ஷிணாமூர்த்தி, கஜலக்ஷ்மி, சனீ ஸ்வரர், சண்டிகேஸ்வரர், பைரவர் ஆகியோர்கள் காட்சிதருகிறார்கள்..

- தமிழ் மாதமான ஐப்பசி ,திருவாதிரை, சிவராத்திரி ஆகிய நாட்களில் திருக்கல்யாணத்தின் மங்களகரமான நாட்கள் இங்குக் கொண்டாடப்படுகின்றன.
- இந்தக் கோவிலில் சிவபெருமான் சந்திரனின் வடிவத்தை எடுக்கிறார்.
- இது சூரிய ராசியான கடக ராசி மக்களுக்குச் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. மற்ற சூரிய ராசி பக்தர்களும் சந்திரனின் ஆசீர்வாதத்தைப் பெற இந்தக் கோவிலுக்கு வருகிறார்கள்.
- விவசாயிகள் சேரன்மகாதேவியில் இறைவனை வழிபட்டால் வளமான விளைச்சல் கிடைக்கும்.
- இறைவன் தனது பக்தர்களுக்கு ஆரோக்கியமான மற்றும் வசீகரமான உடலைக் கொண்டு ஆசீர்வதிக்கிறார்,
- இக்கோயிலில் இறைவனை வழிபடுவது தஞ்சைக்கு அருகில்

**முக்கிய திருவிழாக்கள்:**

மாசி மாத சிவராத்திரி, ஐப்பசி திருக்கல்யாணம், ஐப்பசி கந்த ஷஷ்டி, மார்கழி திருவாதிரை ஆகிய திருவிழாக்கள் விமரிசையாக நடைபெறும்.

நடைதிறப்பு காலை 7.00 மணி முதல், 9.00 வரை, மாலை 5.00 மணி முதல் 7.00 மணி வரை

## 3. செவ்வாய் கோடகநல்லூர் கைலாசநாதர் கோவில் கோடகநல்லூர்

அம்சம்: செவ்வாய்

நட்சத்திரம்: மிருக சிரீடம், சித்திரை, அவிட்டம்



மூலவர்: ஸ்ரீகைலாசநாதர்

அம்பாள்: ஸ்ரீசிவகாமி

திருக்கோவில் விருட்சம்: வில்வம்,

தீர்த்தம்: தாமிரபரணி.

சிறப்பு சன்னதி: ஆனந்த கௌரி அம்மன், இங்குத் தனி சன்னதியில் காட்சித் தரும் ஆனந்த கௌரி அம்மை ஐந்து தலை நாகம் குடைபிடித்த நிலையில் காட்சித் தருவது சிறப்பம்சம். இவளை வணங்கினால் சர்ப்ப தோஷங்கள் நிவர்த்தி ஆகும்.

**கோடகநல்லூர் பெயர்க் காரணம்:**

கார்கோடகன் வழிபட்டதால் இந்த ஊர் கார்கோடக நல்லூர் என்றும், கார்கோடக ஷேத்திரம் என்றும் அழைக்கப்பட்டது. தற்போது கார்கோடக நல்லூர் என்ற பெயர் மருவி கோடக நல்லூர் என்று விளங்கி வருகிறது.

**சுவாமி கைலாசநாதர்:**

கிழக்கு நோக்கிய கருவறையில் சுவாமி கைலாசநாதர் லிங்கத் திருவுருவில் அழகிய வடிவாக க் காட்சித் தருகிறார். இவருக்கு விசேஷ காலங்களில் நாகாபரணம் சாத்தி அலங்காரம் செய்யப்படும்.



இங்குள்ள நந்திக்குச் செவ்வாய் தோஷத்தால் திருமணம் தள்ளிப் போகும் பெண்கள் விரலி மஞ்சளால் கட்டப்பட்ட மாலை சாற்றி வழிபடுவது சிறப்பம்சம் ஆகும்.

**முக்கிய திருவிழாக்கள்:**

இங்கு மாசி மாத சிவராத்திரி, மார்கழி திருவாதிரை ஆகிய வருடாந்திர உற்சவங்களும், பிரதோஷம் மற்றும் செவ்வாய்கிழமை சிறப்பு வழிபாடுகளும் நடைபெறும்

திருநெல்வேலியில் இருந்து பத்து கிலோமீட்டர் தொலைவில் உள்ளது

நள மகாராஜனையும் , பரிஷத் மகாராஜாவையும் தீண்டிய கார்கோடகன் என்ற பாம்பு தன்னுடைய பாவம் தீர சிவபெருமான் அருள் வேண்டி தியானம் செய்து வழிபட்ட தலம் கோடகநல்லூர். கார்கோடகன் என்ற பாம்பு வழிபட்டதால் கார்கோடகநல்லூர் என்ற பெயர் உருவாகி தற்பொழுது கோடகநல்லூர் என்று வழங்கப்படுகிறது . இங்குக் கரு நீல வண்ண பாம்புகள் நிறைந்து காணப்பட்டாலும், நல்லோரைத் தீண்டுவதில்லை.

திருநெல்வேலியில் இருந்து சுமார் 7 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது நவக்கிரகங்களில் ராகு பகவான்

**அம்மை சிவகாமி:**

தெற்கு நோக்கிய தனி கருவறையில் அம்மை சிவகாமி நின்ற கோலத்தில், ஒரு கையில் மலர் ஏந்தியும், மறு கையைக் கீழே தொங்கவிட்ட படியும், இடை நெளித்தும், அழகிய புன்சிரிப்புடனும் காட்சித் தருகிறாள்.

நவ கைலாய தலங்களிலேயே இத்தல லிங்க மூர்த்தம் தான் அளவில் பெரியது என்ற சிறப்பை பெறுகிறது.

இங்கு விநாயகரும், சுப்பிரமணியருமே துவார பாலகர்களாகக் காட்சித் தருகின்றார்கள்.

இங்கு நவக்கிரகங்களுள் அங்காரக பகவான் சிவனை வழிபட்டதால், செவ்வாய் தோஷ பரிகாரத்திற்கு ஏற்ற தலம் இது என்று கூறப்படுகிறது.

இங்கு மற்ற கோவில்களைப் போல கொடி மரம், பலி பீடம் மற்றும் பரிவார மூர்த்திகள் சன்னதி இல்லை.

ஆட்சி புரியும், செங்காணி, சங்காணி என்றெல்லாம் அழைக்கப்படும் குன்னத்தூர் திருநெல்வேலியில் இருந்து மேலவேங்கடபுரம் செல்லும் சாலையில் அமைந்துள்ளது

நடைதிறப்பு காலை 6.00 மணி முதல் 12.00 வரை, மாலை 5.00 மணி முதல் 6.30 மணி வரை

## 4. ராகு குன்னத்தூர் கோத பரமேஸ்வரர் கோவில் குன்னத்தூர்

அம்சம்: ராகு

நட்சத்திரம்: திருவாதிரை, சுவாதி, சதயம்

மூலவர்: ஸ்ரீகோத்த பரமேஸ்வரர் என்ற கைலாய நாதர்

அம்பாள்: ஸ்ரீசிவகாமி

திருக்கோவில் விருட்சம்: வில்வ மரம்,

தீர்த்தம்: தாமிரபரணி

கருவறையில் கோத பரமேஸ்வரர் மார்பில் சர்ப்பம் தரித்த நிலையில் அருளுகிறார். இந்தச் சிலை ஒரே கல்லில் வடிவமைக்கப்பட்டது. இவருடைய திருமார்பில் சர்ப்ப முத்திரை காணப்படுவது சிறப்பம்சம் ஆகும். இதனை இவருக்கு அபிஷேகம் செய்யும்போது தெளிவாகப் பார்க்க முடியும். இவருக்குத் திருநாகீசர், கைலாசநாதர் போன்ற வேறு திருநாமங்களும் உள்ளன.

தெற்கு நோக்கிய தனி கருவறையில் சிவகாமி அம்மை ஒரு கரத்தில் மலர் ஏந்தியும், மறு கரத்தைக் கீழே தொங்கவிட்ட படியும், நின்ற கோலத்தில், புன்னகை பூத்த முகத்துடன் காட்சித்தருகிறாள்.

கோயிலில் நில அளவு கோல் ஒன்று



உள்ளது. இது, நிலம் சம்பந்தப்பட்ட கரத்தை, பிரச்சனைகளைக் கையாளப் பயன்படுத்தப்பட்டதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. தடைப்பட்டுக் கொண்டே போகும் திருமணங்கள் இனிதே நடக்க, நல்ல மக்கட் பேறு அமைய, கால சர்ப்ப தோஷங்கள் நீங்க, உத்தியோக பிராப்தி கிட்ட, லாப ஸ்தானம் அடைய, ராகு தோஷ நிவர்த்தி பெற இத் தல வழிபாடு சிறந்தது.

குன்னத்தூர் என்று தற்போது அழைக்கப்படும் இந்த ப் பகுதிக்குச் சங்காணி என்ற பெயரும் உள்ளது. காணி என்றால் நிலம் என்றும் செங்காணி என்றால் செம்மண் நிறைந்த நிலம் என்றும் பொருள். செங்காணி என்பதே பின்னர் சங்காணி என்று மறுவியுள்ளதாகக் கூறப்படுகிறது. மேலும் இந்தப் பகுதியில் சிறு சிறு குன்றுகள் சூழ்ந்து இருப்பதால் குன்றத்தூர் என்ற பெயர் வழங்கப்பெற்று பின்னர் குன்னத்தூராக மறுவியதாகவும் செய்தி உள்ளது.

## கோத பாரமேஸ்வரர் கோவில் அமைப்பு

தாமிரபரணி ஆற்றின் கரையில் குன்றுகள் நிறைந்த பொத்தை நிலப்பகுதியில் அமையப்பெற்றுள்ளது இந்தக் கோவில். இங்குத் தனி விமானத்துடன் கூடிய கிழக்கு நோக்கிய தனி சந்நிதியில் சுவாமியும், தனி விமானத்துடன் கூடிய தெற்கு நோக்கிய சந்நிதியில் அம்மையும் காட்சி தருகிறார்கள். இது தவிர சுற்றுப் பிரகாரத்தில் நந்தி, தக்ஷிணாமூர்த்தி, கன்னிமூல கணபதி, வள்ளி தெய்வானை உடனுறை ஆறுமுகநயினார், சண்டிகேஸ்வரர், பைரவர் ஆகியோர் எழுந்தருளி அருள்பாலிக்கிறார்கள்.

## கோதபரமேஸ்வரர் கோவில் சிறப்புக்கள்

1. முற்காலத்தில் இந்த ஊர் கீழவேம்புநாட்டு செங்காணியான நவணி நாராயண சதுர்வேதிமங்கலம் என அழைக்கப்பட்டு வந்திருக்கிறது.

2. இங்குள்ள கல்வெட்டுக்கள் மூலம் இந்தக் கோவில் 16 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டுள்ளதாகத் தெரிய வருகிறது.

3. இந்தக் கோவில் பூஜைகள் முறையாக நடைபெற வீரபாண்டிய மன்னன் 4200 ரூபாய் மதிப்புடைய பணம் கொடுத்துள்ளதும் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டு உள்ளது.

4. இந்தக் கோவிலில் நில அளவுகோல் ஒன்று உள்ளது. இது ஊரில் ஏற்படும் நிலம் சம்மந்தமான பிரச்சனைகளைத் தீர்த்து வைக்கப் பயன்படுத்தப்பட்டதாகவும் கல்வெட்டில் குறிக்கப்பட்டு உள்ளது.

5. திருநெல்வேலி அருள்மிகு நெல்லையப்பர் திருக்கோயிலில் பாதுகாக்கப் பட்டுவரும் செப்பேடு ஒன்றில் இந்தத் திருத்தலத்தின் பெயர் திருநாங்கீசநேரி என்றும், இங்குள்ள இறைவனின் பெயர் திருநாகீசர் என்றும் அழைக்கப்பட்டுள்ள செய்தி குறிப்பிட பட்டு உள்ளது.

6. இங்குச் சுவாமிக்கு எதிரே காட்சிதரும் நந்தி மற்ற கோவில்களைப் போல் அல்லாமல் கால்களை தூக்கி எழும்புவதற்குத் தயாராக இருப்பது போல் உள்ளார். இதன் பொருள்,

பக்தர்களுக்கு ஆபத்து வரும் வேளையில் அவர்களை ஆபத்திலிருந்து மீட்பதற்குத் தயாராக உள்ளார் என்பது போல உள்ளதாகக் கூறப்படுகிறது.

7. இந்தக் கோவிலின் அருகே கீழத்திருவேங்கடநாதபுரம் வரதராஜ பெருமாள் கோவிலும், சற்று தொலைவில் சிறிய மலைக்குன்றின் மீது மேலத்திரு வெங்கட நாத புரம் கோவில் கோவிலும் அமையப்பெற்றுள்ளது. இது திருப்பதிக்குச் சென்று வழிபடும் நிகழ்வைக் குறிக்கும் விதத்தில் உள்ள சிறப்பம்சம் ஆகும். திருப்பதியில் காளஹஸ்தி, கீழ்திருப்பதி, திருமலை திருப்பதி உள்ளது போல, இங்குச் சங்காணி சிவன் கோவில், கீழத்திருவேங்கடநாதபுரம், மேலத்திருவேங்கடநாதபுரம் ஆகியவை அமையப்பெற்றுள்ளது சிறப்பம்சம் ஆகும்.

8. குன்னத்தூர் கோதை பரமேஸ்வரர் திருக்கோவில் ராகு ஸ்தலமாகவும் புகழ்பெற்று விளங்குகிறது. மிகவும் அபூர்வமான லிங்கத்தின் மீது பாம்பின் உருவத்தை இந்தத் திருக்கோவிலில் காணலாம். நாக தோஷம் மற்றும் ராகு தோஷம் நீங்க இந்தக் கோவிலில் பக்தர்கள் கூட்டம் அலைமோதுகிறது. குழந்தை இல்லாதவர்களின் இந்தத் திருத்தலத்திற்கு வந்து குழந்தைகளுக்காகப் பிரார்த்தனை செய்கிறார்கள்.

## குன்னத்தூர் கோதை பரமேஸ்வரர் திருக்கோவில் நடைபெறும் திருவிழாக்கள்

மாசி மாத சிவராத்திரி, மாதாந்திர பிரதோஷ வழிபாடுகள் ஆகியவை சிறப்பாக நடைபெறுகிறது.

டிசம்பர், ஜனவரி மாதத்தில் நடைபெறக்கூடிய திருவாதிரை திருவிழா, நவம்பர்டிசம்பர் மாதங்களில் நடைபெறக்கூடிய திருக்கார்த்திகை திருவிழா, பிரதோஷம் நாட்களில் நடைபெறக்கூடிய 13 ஆம் நாள் அமாவாசை அல்லது பௌர்ணமி திருவிழா என இந்தத் திருக்கோவிலில் திருவிழாக்கள் அனைத்தும் சிறப்பான முறையில் கொண்டாடப்படுகிறது.

### நடைதிறப்பு

ஞாயிறு வியாழன் : காலை 7:30 10:45 வரை மாலை 5 6:30 வரை

வெள்ளிக்கிழமை: காலை 6 - 12 வரை மாலை 5 - 7 வரை

சனிக்கிழமை: காலை 6 - 12 வரை

(தொடரும்)

## திவ்ய தேச கவிதை தரிசனம்

# திருக்காவளம்பாடி



**அழ. மணிமேகலை,**
காரைக்குடி

திவ்ய தேசங்களுள் இருபத்தியேழாவது திவ்யதேசம், திருக்காவளம்பாடி. சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபத்தியேழாவது திவ்யதேசமாகும். இத்தலம் சீர்காழி யிலிருந்து பூம்புகார் செல்லும் சாலையில் திருநாங்கூரிலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

பார்வதிதேவியின் தந்தை தட்சன், சிவபெருமானை அழைக்காமல் யாகம் செய்தார். இதற்குச் செல்ல வேண்டாம் என்று பார்வதி தேவியை, சிவபெருமான் தடுத்தார். இருப்பினும், சிவபெருமானை அழைக்காமல் யாகம் செய்வது முறையல்ல என்பதைத் தந்தை யிடம் வலியுறுத்துவதற்காக, பார்வதிதேவி யாகத்துக்குச் சென்றார். யாகத்திற்குச் சென்ற பார்வதிதேவியை, தட்சன் அவமானப்படுத்தினார். அதைக் கேள்வியுற்று கடுஞ்சினம் கொண்ட சிவன், சீர்காழிக்கு அருகிலுள்ள உபயகாவிரி என்னும் இடத்தில், அதாவது தெற்கில் காவிரி நதிக்கும் மேற்கில் மணியாற்றுக்கும் நடுவில், ருத்ர தாண்டவம் ஆடினார். அவரது திருச்சடை முடி தரையில் பட்ட இடமெல்லாம் சிவவடிவங்கள் தோன்றின. 11 சிவவடிவங்கள் தோன்றிய நிலையில், அவர்களுடன் சேர்ந்து தாண்டவம் ஆடினார். உலக உயிர்கள் கலக்கமடைந்ததால், முனிவர்கள், தேவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, திருமாலைச் சந்தித்து, சிவபெருமானைச் சாந்தப்படுத்துமாறு வேண்டினர்.



திருமால், திருநாங்கூரில் 11 வடிவங்களோடு சிவபெருமான் முன்பாகத் தோன்றி, அவரைச் சாந்தப்படுத்தி, தாண்டவத்தை நிறுத்தி, அனைத்து சிவவடிவங்களையும் ஒன்றுபடுத்தினார். இதனால் இங்கு 11 பெருமாள் கோவில்களும் 11 சிவன் கோவில்களும் உள்ளன.

அதன்படி, திருமணிமாடக்கோவிலில் நாராயணப் பெருமாளாகவும், திருஅரிமேய விண்ணகரத்தில் குடமாடுகூத்தராகவும், திருச்செம்பொன்செய் கோவிலில் செம்பொன் அரங்கராகவும், திருத்தெற்றியம்பலத்தில் செங்கண்மாலாகவும், திருவெள்ளக்குளத்தில் அண்ணன் பெருமாளாகவும், திருவண்புருஷோத்தமத்தில் புருஷோத்தமப் பெருமாளாகவும், திருத்தேவனார்த் தொகையில் மாதவப் பெருமாளாகவும், திருப்பார்த்தன்பள்ளியில் தாமரையாள் கேள்வனாகவும், திருக்காவளம்பாடியில் கோபாலகிருஷ்ணனாகவும், ஆக மொத்தம் 11 பெருமாள்களாகத் திருநாங்கூர் திருப்பதியில் எழுந்தருளி அருள்பாலிக்கின்றனர்.

திருநாங்கூரிலும் திருநாங்கூரைச் சுற்றிலும் அமைந்துள்ள இப்பதினோரு திருநாங்கூர்த் திருப்பதிகளில் ஒன்றான திருக்காவளம்பாடி என்ற தலமே இத்தலமாகும். காவளம் என்றால் தோட்டம். தோட்டத்திற்கு நடுவில் இருக்கும் கோவில். ஆதலால், இத்தலம் திருக்காவளம்பாடி ஆயிற்று. இங்கிருக்கும் பெருமாள் துவாரகையிலிருந்து வந்தவர் ஆவார்.

நாரதர், தேவலோகத்தில்



கேட்டாள். கேட்டதும் கொடுப்பவரல்லவா கிருஷ்ணர்! பாரிஜாத மலரென்ன? பாரிஜாத மரத்தையே தேவலோகத்திலிருந்து கொண்டு வந்து பாமாவின் மாளிகைத் தோட்டத்தில் வைத்துத் தருவதாக வாக்குக் கொடுத்துவிட்டார்.

அச்சமயம் பார்த்து, இருந்து ஒருநாள் கொஞ்சம் பாரிஜாத மலர்களைப் பறித்துக்கொண்டு, ஸ்ரீகிருஷ்ணனைப் பார்க்க துவாரகைக்கு வருகின்றார். நேராக ருக்மணியிடம் சென்று, அப்பூக்களைக் கொடுத்துவிட்டு கலகத்தை ஆரம்பித்துவிட்டுக் காணாமல் போகிறார். பக்கத்து மாளிகையில் இருந்து ஆளை அசரடிக்கும் வாசனை வருகிறதே எனச் சத்தியபாமா வியக்க, தேவலோக மலர் வந்திருக்கின்ற செய்தி தெரியவருகின்றது. ருக்மணியிடம் கேட்டால் தருவாளோ, மாட்டாளோ என யோசித்து, கிருஷ்ணர் வந்தவுடன் தமக்குப் பாரிஜாத மலர்கள் வேண்டுமெனக்

நரகாசுரனால் இந்திரனுக்கும் தேவர்களுக்கும் தொல்லை அதிகமாகப் போய்விட்டது. தேவலோகத்தைக் காப்பாற்றித் தருமாறு, கிருஷ்ணரை வேண்டினர். துவாரகையிலிருந்து உடனே கிளம்பியாக வேண்டும். ஆனால், சாரதியைக் காணவில்லை. உடனே சத்தியபாமாவே தேரோட்டியாக மாறி, இருவரும் இந்திரலோகம் கிளம்பினர். நரகாசுரனுக்கும் கிருஷ்ணருக்கும் பயங்கர யுத்தம். நரகாசுரன் செலுத்திய அம்பால், அடிபட்டு மயக்கமாகித் தேர்த்தட்டில் விழுந்தார் கிருஷ்ணர். பார்த்த சத்தியபாமா வில்லை எடுத்து நரகாசுரனை வீழ்த்தினாள்.

இவ்வாறு நரகாசுரன் மரணத்தை



அடைய, அவன் வாங்கிய வரமே காரணமாயிற்று. "தாயின் கையால் மரணம்" என்ற வரம்தான் அவ்வரம். நரகாசுரனும் விஷ்ணுவின் மகன்தான். திருமால் ஒருமுறை வராக அவதாரம் எடுத்து, இரண்யாட்சகன் என்ற அசுரனோடு சண்டை போட்டு, பாதாளத்தில் மறைத்து வைத்திருந்து பூமாதேவியை மீட்டார். அப்போது பூமாதேவிக்கும், வராக அவதார விஷ்ணுவுக்கும் பிறந்தவன்தான் நரகாசுரன். சத்தியபாமா பூமாதேவியின் அம்சம் என்பதால், நரகாசுரனுக்கு, அவனது தாயான சத்தியபாமாவின் கையால் மரணம் வாய்த்தது.

மயக்கம் தெளிந்து எழுந்த கிருஷ்ணர், நரகாசுரன் மகனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்தார். பின் நரகாசுரன் சிறை வைத்திருந்த பதினாயிரத்து நூறு கன்னிகைகளை விடுவித்தார். கருவூலத்தில், இந்திரனிடமிருந்து கவர்ந்து கொண்டு சென்ற வெண்கொற்றக்குடை, மணிபர்வதம் போன்ற சிலபல பொருட்கள் எல்லாம் மீட்டு இந்திரலோகம் கொண்டு சேர்த்தனர் கிருஷ்ணரும் சத்தியபாமாவும்.

தேவலோகத்திலிருந்து, இருவரும் கிளம்பும் நேரம் வந்தது. அப்பொழுது, கிருஷ்ணர் பாரிஜாத மரம் ஒன்றைக் கேட்க, இந்திரன் மறுத்துவிடுகிறார். சினங்கொண்ட கிருஷ்ணர், இந்திரனோடு சண்டை போட்டு, பூம்பொழிலை அழித்து,

பாரிஜாத மரத்தைத் துவாரகைக்கு எடுத்துச் சென்றார். எடுத்துச் சென்ற மரத்தை, பாமாவின் மாளிகைத் தோட்டத்தில், ருக்மணி வீட்டு வேலிக்குப் பக்கத்தில் நட்டு வைத்தார். மரம் பூக்கத் தொடங்கியதும், பூக்கள் இருவீட்டிலுமே பூத்துக் கொட்டியது.

இங்கே திருநாங்கூரில், பதினோரு ரூபத்தில், சிவனுடைய ஏகாதஸ ருத்ர வடிவங்களை சாந்தப்படுத்துவதற்காக, தரிசனம் கொடுத்த பொழுது, அவற்றில் ஒரு ரூபமாக, துவாரகைக்கு அதிபதியான கிருஷ்ணர் ருக்மணி சத்தியபாமா சகிதமாக வந்து எழுந்தருளினார். அதே ரூபத்தில், இவ்விடத்தில் இருந்து பக்தர்களுக்கு அனுக்கிரகம் செய்யுமாறு, அனைவரும் கேட்டுக் கொண்டனர்.

இந்திரனோ, கிருஷ்ணரை மகிழ்விக்கும் பொருட்டு, இவ்விடத்திலேயே ஒரு தோட்டம் ஏற்படுத்தி, தேவலோக மரங்களை நட்டு, துவாரகை கிருஷ்ணர் இருப்பதற்கு ஒரு காவளம் அமைத்துக் கொடுத்தான். இந்திரன் அமைத்துக் கொடுத்த அவ்விடமே திருக்காவளம்பாடி ஆயிற்று. திருநாங்கூரின் புகழ்பெற்ற கருடசேவைக்கு, இந்தத் துவாரகாபுரி நாதனும் எழுந்தருள்கிறார்.

இங்குள்ள,

**மூலவர் – கோபாலகிருஷ்ணன் (இராஜகோபாலன்)**

**தாயார் – மடவரல் மங்கை, செங்கமல நாச்சியார்**

**தீர்த்தம் – தடமலர்ப்பொய்கை**

**விமானம் – சுயம்பு விமானம்**

**கோலம் – ருக்மணி, சத்யபாமாவுடன் கிழக்கு நோக்கிய நின்ற திருக்கோலம்**

தாயாருக்கென்று தனிச்சன்னதி இல்லை. பாமா ருக்மணி சமேத இராஜகோபாலசாமி கையில் சாட்டைக் குச்சியுடன் நிற்கும் காட்சி என்றுமே அழகுதான். திருமங்கையாழ்வாரின் பிறந்த இடமான குறையலூர் மற்றும் அவர் வைணவ அடியார்களுக்கு அன்னதானம் நடத்திய மங்கை மடம் ஆகிய இரண்டு இடங்களும் இத்தலத்திற்கு அருகாமையில் அமைந்துள்ளன.

கவிஞர் மீனவன் இத்தலம் குறித்து எழுதிய பாடல்களும் அவற்றின் பொருளும் பின்வருமாறு.

1. திருமால் முதலை வாயிலிருந்து

யானையைக் காப்பாற்றியவன். பாம்புப் படுக்கையில் துயின்று கொண்டிருப்பவன். அவன் கோபாலகிருஷ்ணனாய், தடமலர்ப் பொய்கை இருக்கும் திருநாங்கூரின் இப்பதியில், நாச்சியார் மடவரல் மங்கையுடன் மகிழ்ச்சியாக உறைந்திருக்கின்றான். அவனின் பாதங்களைப் போற்றுவோம்.

மடவரலாம் மங்கையுடன் மகிழ்கின்ற கோபாலன்
தடமலர்சேர் பொய்கைவளர் தனிப்பதியாம் திருநாங்கூர்
இடங்கொண்டான் இடங்கர்வாய் இருந்துகரி தான்காத்துப்
படஅரவில் துயின்றான்நற் பாதங்கள் போற்றுமினே.

2. திருநாங்கூருக்கு பத்ரிநாத், காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம் போன்ற இடங்களிலிருந்து வந்த பதினொரு நாராயணர்களில், இத்தலத்தில் வந்தமர்ந்த நாராயணரோ துவாரகையிலிருந்து வந்த துவாரகைநாதன் ஆவார். அவர் தன்னுடைய மலர் போன்ற வாயில் வைத்து ஊதுகின்ற சங்கைக் கரத்தில் ஏந்தியுள்ளார். நமக்கெல்லாம் அருள்தரக்கூடிய, அச்சங்கேந்தும் கையை வணங்கி, காலமெல்லாம் நலம் பெறுவோம்.

பத்திரிவாழ் நாதனே பதினோரு நாரணனாய்
இத்தலத்தில் வந்தமர்ந்தான் இனியமலர்த் திருவாயில்
வைத்தூதும் திருச்சங்கம் வாழ்கரத்தான் நமக்கருளும்
கைத்தலத்தை வணங்கிநீர் காலமெலாம் நலம்பெறுவீர்.

3. விஷ்ணு மீனாய், ஆமையாய், வராகமாய், நரசிம்மமாய், வாமனனாய், பரசுராமராய், பலராமராய், இராமராய், கிருஷ்ணராய் பல அவதாரங்கள் எடுத்தவர். அவர் தேன்சூழ்ந்த சோலைகள் நிறைந்த திருக்காவளம்பாடியில், தன்னைச் சூழும் அடியார்கள், தன்னுடைய அடியைப் பணிவதற்காக வந்து அமர்ந்திருக்கின்றார். அவருடைய திருவடியை அனைவரும் போற்றுவோம்.

தேன்சூழ்ந்த சோலைத் திருக்கா வளம்பாடி
தான்சூழ்ந்த அடியவர்கள் தாள்பணிய வந்தமர்ந்தான்
மீனாய்நல் ஆமையாய் மேலான பல்லுருவாய்
ஆனான்தன் திருவடியை அனவரதம் போற்றுமினே.

4. அன்று, ஆயர்களின் குலக்கொழுந்தாய் வளர்ந்தவன், அச்சுதனாய் வளர்ந்தவன், தூய மனத்தைக் கொண்டவன், பல மாயங்களைச் செய்து மயக்கக்கூடியவன், பாற்கடலில் நிலைகொண்டிருப்பவன், பாம்பின் மேல் உறங்குபவன், திருநாங்கூரில் வீற்றிருக்கின்றான். அவனுடைய மலரடிகளைத் தொழுதால் வினைகளெல்லாம் தீர்ந்துவிடும்.

மாயத்தான் பாற்கடலில் மன்னினான் திருநாங்கூர்
மேயினான் அரவணையின் மேலுறங்கி அற்றைநாள்
ஆயர்தம் குலக்கொழுந்தாய் அச்சுதனாய்த் தான்வளர்ந்தான்
தூயவன்தன் மலரடியைத் தொழுமின் வினையறுமே.

5. பொய்யாகத் தவங்கள் செய்பவர்களின் புலன்களுக்கு எட்டாதவன். மெய்யாகத் தவங்கள் செய்பவர்களின் புலன்களுக்கு மட்டுமே எட்டுபவன். மை தீட்டிய கண்களையுடைய மடவரல் மங்கையை மணங்கொண்டவன் நம் கோபாலகிருஷ்ணன். அவனுடைய திருக்கரங்கள் நமக்கு அபயம் காட்டுதல் நிச்சயம்.

பொய்த்தவங்கள் செய்வார்தம் புலன்களுக்கே எட்டாதான்
மெய்த்தவங்கள் செய்கின்ற மெய்யர்கட்கே புலனாவான்
மைத்தடங்கண் மங்கையாம் மடவரலை மணங்கொண்டான்
கைத்தலங்கள் நமக்கபயம் காட்டுவது நிச்சயமே.

“இளம் நங்கையான சத்தியபாமாவுக்காகப் போரில் இந்திரனைத் தோற்கடித்து, நந்தவனம் பாழ்பட, பாரிஜாத மரத்தைத் துவாரகைக்கு எடுத்துச் சென்றவன், பூக்கள் செழித்த தோட்டங்கள் சூழப்பட்டதாய், இந்திரனால் உண்டாக்கப்பட்டதான நாங்கூரில் காவளந்தண்பாடியில் எழுந்தருளி இருக்கும் கண்ணனே! நீயே என் துயரைத் துடைப்பவன்” எனத் திருமங்கையாழ்வார் பாடிய 10 பாசுரங்களில் ஒன்று இதோ!

ஏவிளங் கன்னிக்காகி இமையவர் கோனைச் செற்று
காவளம் கடிதிறத்துக் கற்பகம் கொண்டு போந்தாய்
பூவளம் பொழில்கள் சூழ்ந்த புரந்தரன் செய்த நாங்கைக்
காவளம்பாடி மேய கண்ணனே! களைகண் நீயே!

# மூன்று நடிகர்கள்



**- வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன்**

நம்முடைய புராணங்களிலுள்ள கதைகள் யாவும் தத்துவங்களை உள்ளடக்கியவை. சிவபெருமான் திரிபுரங்களைச் சங்காரம் செய்தான். மும்மலங்களையும் அழிக்கும் ஞான உருவுடையவன் என்பதையே அது காட்டுகிறது என்று திருமூலர் சொல்வார்.

கடவுள் ஒருவரே. அவரே வேறு வேறு வடிவில் அன்பர்களுக்கு அருள் செய்ய எழுந்தருளுகிறார். புராணங்கள் ஒவ்வொரு மூர்த்திக்கு உயர்வு கூறும் தன்மையைக் காணலாம். சிவபுராணங்களில் சிவபெருமானே பரதெய்வ மென்றும் மற்றவர்கள் எல்லாம் அவனுக்குள் அடங்குவர் என்றும் இருக்கும்; அந்தக் கொள்கையை வெளிப்படுத்தும் கதைகளும் இருக்கும். அப்படியே விஷ்ணு புராணங்களைப் பார்த்தால் சிவனைவிடத் திருமால் உயர்ந்தவர் என்ற கருத்தையும் அதற்கு ஏற்ற கதைகளையும் காணலாம்.

சிவ புராணங்களைச் சைவத்தில் ஆழ்ந்த பற்றுள்ள "ஒருவர் இயற்றினார் என்றும், விஷ்ணு புராணங்களை வைஷ்ணவத்தில் ஆழ்ந்த பற்றுள்ள வேறு ஒருவர் இயற்றினார் என்றும் இருந்தால் அவரவர்கள் தம் தம் தெய்வத்தை உயர்த்திக் கூறுவது இயல்பென்று கொள்ளலாம். ஆனால் இரண்டு வகையான புராணங்களையும் ஒருவரே இயற்றி யிருக்கிறார். வியாசரே பதினெண் புராணங்களையும் இயற்றினார். அப்படி இருக்க அவர் இரண்டு வேறு விதமாகச் சொல்லலாமா?



ஒரு நாடகக் கம்பெனியில் அண்ணன் தம்பி இருவர் சிறப்பான நடிகர்கள். அவர்களே அந்த நாடகக் குழுவிற்குக் கூட்டுத் தலைவர்கள். திங்கட்கிழமை நடைபெறும் நாடகங்களில் அண்ணன் அரசனாக இருப்பான்; தம்பி வேலைக்காரனாக இருப்பான். புதன் வெள்ளிக் கிழமைகளும் அப்படித்தான். செவ்வாய், வியாழன், சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் தம்பி அரசனாக இருப்பான்; அண்ணன் வேலைக்காரனாக நடிப்பான். அவரவர்கள் நடிப்புக்கு ஏற்ப நாடகங்கள் இருக்கும். இந்தக் குழுவுக்கு நாடகங்களை எழுதித் தரும் நாடகப் புலவர் ஒருவர் இருந்தார்.

ஒருவருக்குப் புதன்கிழமைதான் ஒய்வு. அவர் நாடகம் பார்க்கும் போதெல்லாம் அண்ணன் அரசனாக இருப்பான்; தம்பி வேலைக்காரனாக இருப்பான். சில சமயங்களில் திங்கட்கிழமையும் ஒய்வு கிடைக்கும். அப்போதும் அண்ணன் தம்பி அரசன்,வேலைக்காரனாக நடிப்பதைப் பார்ப்பார். மற்றொருவர் செவ்வாய்க்கிழமை,ஞாயிற்றுக் கிழமைகளில் நாடகம் பார்ப்பார். அவருக்குத் தம்பியே அரசனாகவும், அண்ணனே வேலைக்காரனாகவும் காட்சியளிப்பார்கள். முன்னே சொன்னவர் தாம் பார்க்கும் காட்சிகளிலிருந்து

அண்ணனே உயர்ந்த வேஷம் போடுகிறவனென்றும், தம்பியே தாழ்ந்த பாத்திரமாக நடிப்பான் என்றும் தீர்மானித்துக் கொண்டார். பின்னவரோ அதற்கு நேர்மாறாக, தம்பியே உயர்ந்த பாத்திர மென்றும் அண்ணனே தாழ்ந்த பாத்திரமென்றும் எண்ணினார்.

எல்லாக் கிழமைகளிலும் நாடகம் பார்க்கிறவர்கள் அண்ணனும் தம்பியும் சந்தர்ப்பம் போல உயர்ந்த பாத்திரமாகவும் தாழ்ந்த பாத்திரமாகவும் மாறி மாறி நடிப்பார்கள் என்ற உண்மையைத் தெரிந்து கொள்வார்கள். அது மட்டும் அன்று. அண்ணன் தம்பி இருவரும் ஒத்த கலைத் திறமையை யுடையவர்களென்றும், உயர்ந்த பாத்திரமானாலும், தாழ்ந்த பாத்திரமானாலும் அவ்வளவும் நடிப்பே என்றும், அதைக் கொண்டு அவர்கள் கலைத்திறமைக்கு உயர்வு தாழ்வு ஏதும் கூடாது என்றும் கலையின் உண்மையைத் தெரிந்தவர்கள் உணர்ந்து கொள்வார்கள்.

சைவ வைஷ்ணவ வேறுபாடுகளும் இத்தகையனவே. இருவகைப் புராணங்களையும் இயற்றிய வியாசர் நாடகம் எழுதிய புலவரைப்போன்றவர்.நாடகங்களில் நடிக்கும் அண்ணன் தம்பிகளைப் போன்றவர்கள் சிவபெருமானும் திருமாலும். அவர்களுள் வேறுபாடு இல்லை. இரு வகைப் புராணங்களையும் படித்தால் உண்டாகும் வேறுபாட்டு உணர்ச்சி இந்த உண்மையை உணர்ந்தால் நீங்கும். இல்லையானால் வியாசர் இரு வேறு வகையில் சொன்னார் என்ற குற்றத்துக்கு ஆளாவார். அவர் ஆளுக்குத் தகுந்தபடி சாட்சி சொல்லும் கூட்டத்தைச் சேர்ந்தவர் அல்லவே!

சிவ விஷ்ணு புராணங்களில் வரும் வரலாறுகளை இந்தக் கண் கொண்டு பார்க்க வேண்டும். இறைவன் செய்யும் திருவிளையாடல்கள், அருட்பெருங் கூத்துக்கள், நாடகங்கள் என்பவற்றினூடே பொதித்திருக்கும் உட்கருத்தை உணர வேண்டும்.

திருமாலும் பிரமனும் தான்தானே உயர்ந்தவன் என்று வாதிடச் சிவபெருமான் சோதி மலையாக நின்று தன் அடிமுடியைத் தேடப் பணித்ததாகவும், அவர்கள் காண முடியாமல் அயர்ந்து சிவனே

உயர்ந்தவன் என்று அறிந்து கொண்டதாகவும் வரும் புராண வரலாற்றைப் பல முறை நாம் கேட்டிருக்கிறோம்.

திருமால் திருமகளுக்கு அதிபதியாக, எல்லாரிலும் சிறந்த செல்வராக இருப்பவர். செல்வந்தான் எல்லாவற்றிலும் உயர்ந்தது. ஆகவே செல்வம் படைத்தவனே யாரினும் உயர்ந்தவன் என்று செருக்கடையும் பாத்திரமாக அவர் வேஷம் போட்டார். பிரமனே கலைமகளுக்கு நாயகன், படைக்கும் தெய்வம். அறிவாற்றலும் படைப்பாற்றலும் மிக்கவன். அறிவும் படைப்பாற்றலும் உடையவனே உயர்ந்தவன் என்ற கட்சிக்குப் பிரதிநிதியாக வேஷம் போட்டான் அவன்.

செல்வத்தாலும் அறிவினாலும் உண்மையைக் காண முடியாது. செல்வச் செருக்கும், அறிவினால் உண்டாகும் செருக்கும் ஒருவனுடைய பண்பைத் தாழ்த்திவிடும். அவர்களுக்கு மெய்ஞ்ஞானம் புலப்படாது. இதை அறிவுறுத்தும் நாடகம் திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிய கதை. சிவபெருமான் ஞானத்தின் வடிவாக, சத்தியத்தின் உருவமாக, ஆனந்தத்தின் அடையாளமாகச் சத்திதானந்த மூர்த்தியாக நின்றான். செல்வச் செருக்கும் கல்விச்செருக்கும் உண்மையை உணர மாட்டாமல் தடுக்கும்; மெய்ஞ்ஞானத்தை அடையவும் அமைதியான ஆனந்தத்தைப் பெறவும் அவ்விரண்டும் தடைகள். இந்த உண்மையையே இந்தப் புராணக் கதை புலப்படுத்துகிறது.

இந்த நாடகத்தை மிகமிகப் பழங்காலத்திலேயே இந்த மூன்று நடிகர்களும் நடித்துக் காட்டினார்கள். நாடகத்தின் உட்கருத்து, செல்வச் செருக்கும், கல்விச் செருக்கும் தீயவை என்பது. நாடகத்தைப் பார்க்கிறவர்கள் அந்தக் கருத்தை மனம் கொள்ள வேண்டும்.

அதைவிட்டுவிட்டு அண்ணனை அரசனாகப் பார்க்கிறவர் அண்ணனே எப்போதும்அரசன் என்று சாதிக்கிறதைப்போல, சிவபெருமானே எல்லாரினும் உயர்ந்தவன் என்று சாதிக்கிறது, இந்தக் கதைக்கு உரிய பயன் அன்று. வியாசர் அந்தப் பயனுக்காகப் புராணத்தை இயற்றவில்லை.

# பெரியபுராணக் கதைக் களம்

**பகுதி – 10**

அன்பர்களே!

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாகப் பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாகக் காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

மார்கழி மாதம் முழுவதும் வழக்கமான அதிகாலை வழிபாட்டுடன் **04-01-2025** முதல்**13-01-2025** வரை மாணிக்கவாசகர் அருளிய திருவெம்பாவை பாடல்கள் பாடி வழிபடும் "திருவெம்பாவை விழாவும் சிறப்பாக நடைபெற்றது".

**10-01-2025**-ல் வைகுண்ட ஏகாதசி வழிபாடும், **12-01-2025**-ல் ஆருத்ரா தரிசன மகா அபிடேகமும் வெகு விமரிசையாக நடைபெற்றன.

## தை மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 17.01.25 | சங்கடஹர சதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 21.01.25 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 27.01.25 | பிரதோஷம் | | |
| 05.02.25 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 06.02.25 | கார்த்திகை | மாலை | ஸ்ரீ ஆறுமுகர் வழிபாடு |
| 08.02.25 | வளர்பிறை ஏகாதசி | மாலை | பெருமாள் சிறப்பு வழிபாடு |
| 10.02.25 | பிரதோஷம் | | |
| 12.02.25 | பௌர்ணமி | மாலை | சிவகாமி அம்மன் வழிபாடு |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

கம்ப வாரிதி ஐயா அவர்கள் தொடர் சுற்றுப்பயணத்தில் இருப்பதால், அவர்களால் கேள்வி பதில் அளிக்க இயலவில்லை, அவர்கள் கேள்வி பதில் அனுப்பியவுடன் அதை இந்த இதழில் பதிப்பிக்கிறோம்

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள ”கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்” சுமார் 44,000 க்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.



# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்




கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 5879 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்குத் தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

நம் இணைய நூலகம் அமைந்துள்ள archives.org என்ற தளம் சமீபத்தில் முடக்கப்பட்டிருந்தது . இறையருளால் அது தற்போது மீண்டும் செயல்பாட்டிற்கு வந்துள்ள நிலையில் மேலும் பல அரிய நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.ஆகவே, நம் இணைய நூலகத்தில் இனி தங்கு தடை இன்றி நாம் பதிவேற்றம் செய்த நூல்களை பார்க்கலாம், பதிவிறக்கம் செய்யலாம்.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை – கார்த்திகை

திருநெல்லை – மார்கழி

திருநெல்லை – தை

திருநெல்லை – மாசி

திருநெல்லை – பங்குனி

திருநெல்லை – சித்திரை

திருநெல்லை – வைகாசி

திருநெல்லை – ஆனி

திருநெல்லை – ஆடி

திருநெல்லை – ஆவணி

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை– கார்த்திகை